குருபாதம்

# ஞானசம்பந்தம்

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 33 ] பிரமாதீச ஆண்டு தைத்திங்கள் 10—2—74 [ இதழ் 3




ஸ்ரீ சோமநாதர் ஆலயத்திருமுன்னர் ஸ்ரீலஸ்ரீ கயிலைக்குருமணி அவர்கள்.

தருமையாதீனக்குருமுதல்வர்



ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள்

உ

குருபாதம்

## ஸ்ரீ குருஞானசம்பந்தர்

## அருள்வாக்கு

பரபரக்க வேண்டா
  பலகாலுஞ் சொன்னேன்
வரவரக் கண்டாராய்
  மனமே—ஒருவருக்கும்
தீங்கு நினையாதே
  செய்ந்நன்றி குன்றாதே
ஏங்கி இளையா
  திரு.

— சிவபோகசாரம் 133.

ஆசிரியர் :

வித்துவான்
இராமலிங்கத் தம்பிரான்
சுவாமிகள்

துணையாசிரியர் :

மகாவித்துவான்
சி. அருணைவடிவேல் முதலியார்

உ

குருபாதம்

# "ஞானசம்பந்தம்"

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 33 || 10-2-74 || இதழ் 3

## உட்பொருள்

உ

குருபாதம்

# ஞானசம்பந்தம்

மலர் 33 | பிரமாதீச - தை - 10—2—74 | இதழ் 3

திருச்சிற்றம்பலம்

பொன்றயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த புன்சடை
பின்றயங்க ஆடுவாய்! பிஞ்ஞகா! பிறப்பிலீ!
கொன்றையம் முடியினாய்! கூடலால வாயிலாய்!
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே — சம்பந்தர்.

திருச்சிற்றம்பலம்

# கோயில் நில உரிமை நிலை

சமதர்மக்கொள்கை :

நமது பாரத தேசத்தில் சமதர்மக் கொள்கையை அடிப்படையாகக் கொண்ட அரசு நாம் நடத்திவருகிறோம். சமதர்மக் கொள்கை என்பது என்ன என்று பொருளியல் வல்லுநர்கள் பலர் கருத்துத் தெரிவித்திருக்கிறார்கள். அதன்வழி பெரிய ஆலைத் தொழில்கள் முதலிய மூலப்பொருள் உற்பத்தித் தொழிற்சாலைகள் அரசுடைமைகளாகும். மற்ற நுகர்வுப்பொருள்கள் வாழவும், வாழ்க்கையில் உயரவும், வளம்பெறவும் தொழில்கள் செய்யவும், கல்வி, முதலிய வசதிகளைப் பெற்றுக்கொள்ளவும் சொத்துடைமைகளைப் பெறவும் அந்த நாட்டிலுள்ள எல்லா மக்களுக்கும் சமவாய்ப்புக்கள் அமைந்திருக்கவேண்டும். எந்த ஒருவருடைய வளர்ச்சியினாலும் பிறிதொருவருடைய வளர்ச்சி தடைப்படக்கூடாது. ஆனால் ஒரு சாரார் வளர்வதற்காகப் பிறிதொரு சாராரின் வளர்ச்சியைக் குறைக்கவேண்டுமென்றோ, ஒருவரிடமுள்ள ஒன்றை வேறுஒருவர்க்கில்லாமையால் எடுத்துப்

பங்கிட்டுக்கொடுக்கவேண்டுமென்றே இல்லை. எல்லோரும் சம காலத்தில் ஒருசேர வாழவும், வளம்பெறவும் வேண்டுமென்பது தான் அதன் அடிப்படைக் குறிக்கோள். இது நமது பண்டைச் சான்றோர்கள் கண்ட சமதர்மம்.

ஜெயப்பிரகாஷ் கருத்து :

அண்மையில் தஞ்சை மாவட்டம் திருவாரூர்ப் பகுதிகளில் வந்து பார்வையிட்டுச் சென்னை திரும்பிய சமதர்மக்கொள்கைத் தலைவரும், சர்வோதயத் தலைவருமான திரு. ஜெயப்பிரகாஷ் நாராயணன் ஒரு கூட்டத்தில் நிலச்சீர்திருத்தம் குறித்துத் தம் கருத்துக்களைத் தெரிவித்துள்ளார். அதன் விரிவுகள் நாளேடு களில் வந்திருக்கின்றன. அதுபற்றி அக்கருத்துக்கள் எவ்விதம் தவருனவை என்பதையும் அந்நாளேடுகள் தம் தலையங்கங்களில் தெளிவாக வெளியிட்டிருக்கின்றன. அவர்கருத்து :- அறநிறுவ னங்களின் நிலவுடைமைகளை நிலம் இல்லாத விவசாயிகளுக்குப் பிரித்துக்கொடுத்துவிட்டால் அவர்களுடையதுயரைத் துடைத்து விடலாம் ; நாட்டில் அமைதியும் வளமும் பெருகும் என்பதாகும். அவசியமானல் இதற்காக ஒரு அவசரச் சட்டத்தைக்கூட வெளி யிட்டு இப்போதே அதனை அமுலுக்குக் கொண்டு வருதல் வேண்டும் என்பதும் அவர் கருத்து.

சாகுபடியாளர் பாதுகாப்புச் சட்டம் :

அற நிறுவனங்களின் பெயரால் உள்ள நில உடைமை கள் எல்லாம் குடிமக்களிடம் சில்லரையாகக் குத்தகைக்கு விட்டு விடவேண்டும் என்றும், நேரடியாக ஒரு சிறு அளவுதான் சாகுபடி வைத்துக்கொள்ளலாம் என்றும் அரசு செய்த சட்டம் இப்போது அமுலில் இருக்கிறது ; அறநிறுவனங்களை மேற்பார்வையிடுவ தற்காகச் சட்டங்கள் முதன்முதல் இயற்றப்பட்ட காலத்தி லிருந்தே, இவற்றின் நில உடைமைகளை நேரடியாகச் சாகுபடி வைத்துக்கொள்ள இயலாதபடியும், அவற்றைக் குடிமக்களிடம் குத்தகைக்கு விட்டுவிடவேண்டுமாயும் சட்டத்தின் மூலமாகவே வலியுறுத்தப்பட்டு வந்திருப்பதும், இவ்விதம் அறநிறுவனங் களின் நிலங்கள் வெகு நீண்டகாலத்துக்கு முன்னதாகவே குடி மக்களிடம் குத்தகைக்கு விடப்பட்டுள்ளன என்பதும் அவர் அறியாதிருப்பதற்கில்லை.

சட்டங்கள் குடிமக்கட்கே சாதகமானவை :

அறநிறுவனங்களின் நில உடைமைகள் எவ்வளவு உண்டோ அந்த அளவு முழுவதும் இப்போது குடிமக்களிடமே குறைந்த குத்தகையில் பிரித்துக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அவ்விதம்

கொடுத்திருப்பதிலும் குடிகள் குத்தகை வைத்துக்கொள்ளும் நில அளவுக்கும் வரம்புகட்டப்பட்டிருக்கிறது. அதன்படி அதிகபட்சம் ஒவ்வொருவருக்கும் 5 ஏக்கருக்கு மேற்போகாத நிலையில் நிலங்கள் சாகுபடிக்கு விடப்பட்டிருக்கின்றன. சாகுபடி செய்யும் உரிமை அவர்களுக்கு நிரந்தரமாக ஆக்கப்பட்டிருக்கிறது. அக்குடிமக்கள் இந்த நிறுவனங்களுக்குக் குத்தகை ஏற்பாட்டின்படி அளப்பதில் தவறினால் அவர்களை அந்த நிலத்தைவிட்டு கோர்ட் மூலம் அப்புறப்படுத்தலாம் என்று அவர்களுக்கு அச்ச உணர்வை உண்டுபண்ணுவதற்காக ஒரு விதி இச் சட்டத்தில் இயற்றப்பட்டிருக்கிறது. இது தவிர மற்ற விதிகள் எல்லாம் குடிமக்களுக்குச் சாதகமாகவே இயற்றப்பட்டிருக்கின்றன.

நிலுவை வைக்க வழி :

மேலேசொல்லிய வண்ணம் அவர்களை நிலத்திலிருந்து அப்புறப் படுத்துவதென்பதும் அவ்வளவு எளிதல்ல. குத்தகை அளப்பதில் நிலுவை தங்கினால் அதை வசூலிக்க நீதிமன்றங்களுக்கோ அல்லது அதற்காக உள்ள தனி அதிகாரிகளிடமோ தான் பரிகாரம் தேடிப் போகவேண்டியதாக இருக்கிறது. அக்குடிகள் அந்த அதிகாரிகளிடம் நேரிலேயே வந்து தம் குறைகளைச் சொல்லிக்கொள்ளலாம். வழக்குரைஞர்கள் அமர்த்த வேண்டிய செலவுகூடக் கிடையாது. அங்கு அவர்கள், தாம் அளக்கவேண்டிய நிலுவைகளை அளப்பதாக ஏற்றுக்கொண்டு அதனைச் செலுத்திவைக்கக் காலக்கெடு கேட்டுப் பெற்றுக் கொள்ளவும் வசதி இருக்கிறது. ஆகவே விளைந்த நெல்லையோ வேறெதையுமோ ஆண்டாண்டுக்குள்ளதை அந்தந்த ஆண்டும் நிலுவை தங்காமல் அளந்துவிடவேண்டும் என்பதில்லாமல் அவரவர் மன நிலைக்கேற்ப அளந்துவிட்டு நிலுவையாக நிறுத்திக்கொள்ளலாம்.

அற நிறுவனங்களுக்குப் பாதகம் :

நியாய உணர்வு உள்ளவர்களும் அவர்களில் இல்லை என்று சொல்வது இயலாது. ஆனால் அவர்கள் எண்ணிக்கை மிகமிகக் குறைவு. நியாய உணர்வு உள்ளவர்கள் அற நிறுவனங்களின் சொத்து இவை, இவைகளுக்கான குத்தகையை அளக்காவிட்டால் அதனால் தாம் அறவழியில் தவறியவர்களாகிவிடக்கூடும் என்று எண்ணி அவர்கள் கொடுக்க முன் வருவது உண்டு. அதையும் மற்றவர்கள் ஊர்க்கட்டுப்பாடு போன்ற பல தொல்லைகளைக் கொடுத்துத் தடுத்து அளக்காதிருக்கும்படி செய்துவிடுகிறார்கள். இதற்குத் தூண்டுகோலாக கிசான் தலைவர்கள் என்ற

பெயரைச் சொல்லிக்கொண்டு, பல கட்சித் தலைவர்களும் நடுவில் அமைந்து வேலைசெய்து வருகிறார்கள். இதில் தலையிடப் பல கட்சிகளுக்குள்ளும் போட்டிகள் மூண்டுவிடுவதும், அதன் விளைவாக இந்த அற நிறுவனங்களுக்குப் பாதகம் ஏற்படுவது மான நிலைமை உள்ளது.

நேர்மையாக அளந்தோர் நிலை ;

அரசினரும், விளைந்தும் கொடுக்காமல் அழும்பாக நிலுவை யாக நிறுத்திவைத்துக்கொண்டவர்களுக்கு ஏதோபெரும்துன்பம் வந்துவிட்டதாகச் சொல்லி அவ்விதம் நிலுவை தங்கிய எல்லா வற்றையும் ஒரேயடியாகத் தள்ளுபடி செய்யச் சட்டம் இயற்றிவிட் டார்கள். ஆகவே இப்போது அழும்பு செய்பவர்களுக்குச் சாதக மாகவே எல்லாப் போக்குகளும் அமைந்திருக்கிறது எனலாம். மேலேகண்டபடி தள்ளுபடி சலுகையைப் பெற்றவர்களில் பலர் குறைவற விளைந்தும் நெல்லை நேர்மையாக அளக்காமல்இருந்து, சட்டத்தால் பயன் அடைந்தவர்கள்தாம். அவர்களில் ஒரு சிறு பகுதியினரே தாங்கள் நன்கு சாகுபடி செய்யச் சக்தியில்லாத நிலையில் துயருற்றவர்கள். இந்த இரண்டு வகையிலும் சேராமல் எல்லா வற்புறுத்தல்களையும் மீறி, விளைந்த நெல்லில் கூடிய வரை நிலுவையாக வைத்துக்கொள்ளாமல் பயபக்தியுடன் அளந்த நியாய உணர்வு உடைய சிலரும் உள்ளனர். இவர் களுக்கு மேலே சொல்லிய சட்டப்படி கிடைத்த தள்ளுபடிச் சலுகை கிடைக்க வாய்ப்பில்லை. ஆகவே நேர்மையாக அளந்த வர்கள், மற்றவர்களின் கேலிக்கும் ஏச்சுக்கும் ஆளானதோடு கிடைக்கக்கூடிய ஒரு பயன் கிட்டாதவர்களாகவும் ஆனார்கள். இது அவர்களுக்கு ஏமாற்றத்தை உண்டுபண்ணிவிட்டதோடு அழும்பு செய்தால் தாங்களும் இவ்விதமாகப் பயன் அடைய இயலும் என்று எண்ணவும் இடம் கொடுத்துவிட்டது.

நில உரிமை பெறத் தவணைச் சட்டம் :

இதற்கு அடுத்தபடியாக அக்குடிமக்களை மயக்கும் விதத்தில் இப்போது ஒரு புதுச்சட்டம் சென்ற ஆண்டில் நமது தமிழகச் சட்ட மன்றத்தில் இயற்றப்பட்டிருக்கிறது. அது பாரத ராஷ்டிர பதியின் அங்கீகாரத்தை எதிர்நோக்கி உள்ள நிலையில் இருந்து வருகிறது. அதன் பயன் இப்போது நிலங்களைச் சாகுபடி செய்து வருபவர்கள், அவர்கள் சாகுபடி செய்யும் அந்த நிலத்துக்கு அளக்கவேண்டிய ஆண்டுக் குத்தகை விகிதத்தில் 12 மடங்கு

உள்ள தொகையைப் பன்னிரண்டு தவணைகளில் பன்னிரண்டு ஆண்டுகளில் செலுத்த உடன்பட்டு, முதல் தவணைத் தொகை செலுத்திவிட்டாலே நிலஉரிமையை அடைந்துவிடலாம். உடனடியாகக் கிரயத்தொகைமுழுவதையும் செலுத்துவதானால் ஒன்பது மடங்கு செலுத்திவிட்டாலே போதும் என்ற ஒரு சலுகையும் இதில் அளிக்கப்பட்டிருக்கிறது. இவ்விதம் உடனடியாக யாரும் செலுத்திவிடுவார்கள் என்று எதிர்பார்ப்பது அருமை. பன்னிரண்டு ஆண்டுக் காலத்தில் பன்னிரண்டு தவணைகளில் செலுத்துவதாக ஏற்றுக்கொண்டு முதல் தவணை செலுத்திவிட்டாலே அந்த நிலத்தின் உரிமை அவர்கள் கைக்கு வந்துவிடுகிறது. பிற்பாடு அவர்கள் செலுத்தவேண்டிய தவணைத்தொகையைத் தான் நில உரிமையை முன்பு பெற்றிருந்தவர்கள் (அதாவது நில உரிமையை இழப்பவர்கள்) வாங்கிக்கொள்வது இயலும். அதுவும் அவ்விதம் தவணைத்தொகை செலுத்துவதில் புதிதாக உரிமை பெற்றோர் தவறிவிட்டால் அதனைப்பெற அதற்கான தனி அதிகாரியிடம் மனுச்செய்து அவர் மூலமாகத்தான், தாம் பெறவேண்டிய தொகையைப் பெற்றுக்கொள்வது இயலும். வேறு வழி எதுவும் அதில் சொல்லப்படவில்லை. சாகுபடி செய்பவர், எந்த அளவு நிலம் உள்ளவர்களது நிலத்தைச் சொந்தமாக்கிக் கொள்ளலாம் என்று குறைந்தபட்சமான வரம்பு கட்டப்படவில்லை. ஆகவே சிறிது நிலம் வைத்திருப்பவர்கள்கூட நில உரிமையை இழக்கவேண்டியதுதான்.

## சட்டத்தில் சம பாதுகாவல் இருக்கிறதா ?

இப்போது குத்தகைக்குள்ள வருவாயைப் பெற்றுக்கொள்வதில் என்னென்ன துன்பங்களும் இன்னல்களும் இருக்கின்றனவோ அவ்வளவும் அதற்கு மேலும் நிலத்தைக் கொடுப்பவர் பின்பும் அனுபவிக்க வேண்டியதாக நேரிடுமே ஒழிய வேறு வழியில்லை. இவ்விதமாகச் சட்டம் இயற்றுதல் ஒருசாராரை ஒழித்தும் ஒழிக்காமலும் வைத்துத் துன்பப்படும்படியாக ஆக்கிவிட்டு மற்றொருசாரார் நலம்பெற வாய்ப்பளிப்பதாகவே ஆவதுதவிர வேறில்லை இதில் எல்லோருக்கும் சம வாய்ப்புக்களும் சமபாதுகாவலும் பெறும் உரிமையிருக்கிறதா என்று பார்க்கவேண்டும்.

## நிலுவை தள்ளுபடிச் சட்டத்தின் விளைவு ;

மேலே சொல்லியிருக்கிறபடி ஆண்டுக் குத்தகை செலுத்தாவிட்டால் குத்தகைதாரர் நிலத்தைவிட்டு அப்புறப்படுத்தப்படலாம் என்ற சட்டம் இருந்த காலத்தில் என்ன நிகழ்ந்துவிட்டது ? பல

ஆண்டுகள் கழித்து அவர்கள் செலுத்தவேண்டிய நிலுவைதள்ளு படிசெய்யப்பட்டது. அதுபோலவே இனியும் அழும்பு செய்வோர் காலத்தைக்கடத்தி அதன் முழுப்பயனையும் ஏதாவது தக்கதொரு காலத்தில் பெறுவது எளிதாகலாம். ஏதாவது ஒரு அரசியல் நெருக்கடி வரவேண்டும், அதனைப் பயன்படுத்திக்கொண்டு தாம் செலுத்தவேண்டிய தவணைத் தொகைக்குத் தள்ளுபடி பெற்றுக்கொள்ளலாம் என்றே எதிர்பார்த்து அழும்பு செய்யவும் கூடும். யார் யார் மெய்யாகவே துயர் உற்று வருந்துகிறார்கள், ஏன் அவ்விதம் ஏற்பட்டது என்பதெல்லாம் பாராது இப்போது தள்ளுபடி அளிக்கப்பட்டதைப் போலவே பின்னரும் தள்ளுபடி பெற்றுக் கொள்ளலாம் என்று எதிர்பார்ப்பதாகவும் ஆகலாம். இவ்விதம் நடைபெறாது என்று இப்போது யாரும் நினைப்பதற்குக்கூட வழியில்லை. அரசியல் நெருக்கடி எப்போது வரும், எவ்வழியாக வரும் என்று யாரும் இப்போது முற்கூறுவதும் இயலாததாகும்.

அற நிறுவனங்களுக்கு நில உடைமை ;

நில உடைமைகளை நம் அற நிறுவனங்களின் பெயரால் நம் மூதாதையர் ஏன் அமைத்துவைத்தார்கள் என்பதைச் சிந்தித்து அதன் முழுப் பொருளையும் உணர்ந்துகொள்வோமானால் இவ்விதமாக வீணான பேச்சுகள் எழுவதற்கு இடம் இருக்காது. இந்த அமைப்பே ஒரு சமச்சீர்நிலை, சமதர்ம அமைப்பு எனலாம். தனியார் எவர் பெயராலும் சொத்துரிமைகளை அமைக்காமல் அந்தந்த நிறுவனத்தின் வழிபடு தெய்வங்களின் பெயரால் இவை அமைக்கப்பெற்றிருக்கின்றன. அவற்றின் பயனை நுகரும் உரிமைகள் அதனை ஒட்டி வாழ்பவருக்கும், நாடி வருபவருக்கும் பொதுவாக எல்லா மக்களுக்கும் கிடைப்பதாக அமைக்கப்பட்டிருக்கிறது. இதன் பயனை தெய்வத்தின்பெயரால் அதன் அருள் வழக்கமாக அரசும் அடையலாம்; ஒன்றுமில்லா ஏழையும் அடையலாம்: தமிழர்கள் நன்றி மறவாதவர்கள். தம்மைப்படைத்த அந்தக் கடவுளுக்குத் தம்மால் எவ்விதம் நன்றி செலுத்துவது இயலும் என்று சிந்தித்து முடிவாக அவனை நினைத்து வழிபடுவது ஒன்றே அமையும் என்பதை ஆழ்ந்து கண்டவர்கள். ஆகவே தமக்குக்கிடைப்பவற்றை அவனுக்கு நிவேதனம் செய்து அப்பொருள்களைப் பெருமான் வழங்கும் அருட்பிரசாதமாக ஏற்றுக்கொள்வதொன்றே தம்மால் இயல்வது என்பதையும் கண்டவர்கள். இந்த அருள் வழக்கமாகிய இதன் பயனை மக்கள் யாவரும் எந்த வேறுபாடுமின்றிப் பெற்று மகிழ வேண்டுமென்பது அவர்கள் குறிக்கோள்.

அற நிறுவனங்களே மக்களின் புகலிடம் :

அதன் விளைவாகவே பல தேவாலயங்களையும், தம் வாழ்வை மக்கள் நலம் பேணுவதற்கென்றே அர்ப்பணித்துள்ள ஆசாரியர்கள்-பெரியோர்கள்-அருளாளர்கள் - அடியார்கள் தங்கியிருக்கும் திருமடாலயங்களையும் நிறுவினர்கள். ஆங்காங்கும் இறைவன் திருப்பெயர் சொல்லி அவனை வாழ்த்தி அப் பொருள்களை இறைவன் பிரசாதங்களாக வழங்கப் பெற்று வந்தனர் ; வருகின்றனர். இதனை ஏற்று நடத்தவும் இதற்கு உதவவும் எனப் பணியாளர்களும் தொண்டர்களும் நியமிக்கப்பெற்றனர். ஆங்காங்கும் நடைபெறவேண்டிய சேவைகளாக அறவுரைகள், தத்துவவிளக்கங்கள், நிகழ வரையறை செய்து அதற்கான பணித்திட்டங்களையும் அதற்காகும் பொருள் வருவாய்களையும் வகுத்துக்கொண்டிருக்கின்றார்கள்.. இந்த நிறுவனங்களின் பெயரால் வரும் எல்லா வருவாய்களும் மீண்டும் பல வழிகளிலும் அம் மக்களையே சென்றடையும்படியான திட்டங்கள் பலவும் வகுத்திருக்கின்றார்கள். மேலும் மக்கள் பட்டினியாலும் – பசியாலும் வருந்தாவண்ணம் அவர்களுக்கு உணவும் பிற நலன்களும் தெய்வத்தின் பெயரால் கிடைப்பதாக வகை செய்துள்ளார்கள் ; நாட்டில் பஞ்சம், போர்நிலை, பெருவெள்ளம் முதலிய பெருந் தீமைகள் வந்து மக்கள் அல்லலுறுங் காலத்தில் அற நிறுவனங்களிலிருந்து உதவிகள் கிடைக்க வழிவகையும் செய்துவைத்துள்ளார்கள். எல்லாவற்றையும்விட மன அமைதி தேடிவரும் ஒருவனுக்கு அமைதியும் ஆத்ம சாந்தியும் கிடைக்கவும், அவன் வாழ்வில் சலிப்பும் ஏமாற்றங்களும் ஏற்பட்டு மனம் உடைந்து துன்புறும் காலத்தில் கடவுளின் அருளால் அவற்றை மாற்றிக்கொள்ளுவதற்கு ஒரு புகலிடமாகவும் தம் தம் வாழ்வில் ஏற்படும் குறைகளை ஒளிவு மறைவின்றி வெளிப்படுத்தி அவைகளைப் போக்கிக்கொள்ள தெய்வ அருள் வேண்டி அமைதி பெற்றுச் சீர்திருந்தவுள்ளதுமான புகலிடங்களாகவும் உள்ளவை இவைதாம். தீய எண்ணங்களை ஒழித்து திருந்திய சிந்தனைகளை வளர்க்கும் சீர்திருத்தப்பண்ணைகளாகவும் உள்ளவை இவை. பலப்பல பெரியோர்களும் அடியார்களும் இவ்விதம் வழிபட்டுத் தாம் தாம் வேண்டிய வேண்டியாங்கு பெற்றவரலாற்று அடிப்படையில் அமைந்தவை நம் தேவாலயங்களும், மடாலயங்களுமாகும்.

நல்வாழ்வு பாதிக்கப்படும் ;

மேலும், இந்த அறநிறுவனங்கள் அவற்றின் வருவாய்களிலிருந்து அதில் பணிபுரியும் பல்லாயிரவர்க்கும் ஊதியமும் பிறவுமாகப் பலப்பல வழிகளிலும் ஆதரவு நல்கி வேலை தந்து பாது

காத்து வருகின்றன. இந்த நிறுவனங்களில் வழிபடுதற்கும் தங்களுடைய பிரார்த்தனைகளைச் செலுத்தி நலம் பெறுதற்கும் நாடிவரும் மக்களுக்குத் தேவையானவற்றை வழங்கி வாணிபம் செய்வோர்க்கும், அம்மக்களுக்குப் பல வழிகளிலும் உதவி நின்று கூலி பெறுவோருமாக அவற்றைச் சார்ந்து பிழைப்போர் பல்லாயிரவர்க்கும் இந்த நிறுவனங்கள் உதவி வருகின்றன. இவ்விதமாக நேரடியாகவும், மறைமுகமாகவும் இந்தத் தமிழ் நாட்டிலும், பாரத தேசமுழுவதிலும் பயன்பெறும் பல லட்சக் கணக்கான குடும்பங்கள் இவற்றின் உறுதியான நிலைப்பாட்டினை எதிர்பார்த்து வாழ்ந்து வருகின்றன. இவற்றின் வருவாய்கள் குறைந்தாலும், இவற்றின் நிலைத்த தன்மையில் குறைபாடுகள் உண்டானாலும் இத்தனை பேர்களின் நல்வாழ்வும் பாதிக்கப்படும். வாழ்விழக்க நேரவும் கூடும். இந்த நிறுவனங்களின் நிலை பேற்றோடு அவர்கள் வாழ்வு பின்னிப்பிணைந்துள்ளது.

அற நிறுவனங்களின் சமூகப் பணிகள் ;

மேலேகண்டதன்றியும் இப்போது நமது அரசியலார் இயற்றி வரும் மக்கள் நலப்பணிகளாக உள்ள பலவற்றிற்கும் பொருளாகவும், வேறு பலவாகவும் இவை உதவி வருகின்றன. காணூர், கேளார், பேசாராக உள்ள மக்களுக்குக் கண்ணொளி வழங்குதல் முதலிய உதவிகள். திக்கற்றோர், பிணியுற்றோர், ஆதரவு இல்லாத குழந்தைகள், உடல் ஊனமுற்றோர் முதலியோர்க்கு நல்வாழ்வுப் பணிகள், மறுவாழ்வுப் பணிகள் பலவற்றிற்கும் இவை முன்வந்து நிதிகளும், பிறபொருள்களும் வழங்கி வருகின்றன. பல கல்வி நிலையங்களை (தொடக்கக் கல்வி முதல் கல்லூரிப் படிப்பு வரையிலும் உள்ளவை) தாமே நடத்தியும், தொடங்கவும் நடத்தவும் உதவி நிதிகள் அளித்தும், சித்த மருத்துவப்பணி, பிற மருத்துவப் பணிகளுக்கு உதவியும் தாமே மருத்துவ மனைகளை நடத்தியும் பணியாற்றுகின்றன. பொது சுகாதாரத்துக்கும், அந்தந்த ஊர்களிலும் நடைபெறும் விழாக்கள் போன்ற நிகழ்ச்சிகளில் ஒன்றியங்களுக்கும் நகரசபைகளுக்கும் உதவி நிதிகள் அளித்தலும், குடிதண்ணீர் வழங்குதலும் இவை போன்ற பலப்பல பொதுப்பணிகளிலும் ஈடுபட்டு மக்கள் நல் வாழ்வில் நிலையான பணிகள் செய்துவருகின்றன. பொதுவாக இந்த நிறுவனங்கள் பங்கு ஏற்காத சமுதாயப்பணிகள் எதுவும் இல்லை என்றே சொல்லலாம். நம் நாட்டின் இசை நடனம், நாட்டியம், கூத்துவகைகள் முதலிய கலைகளை வளர்த்தும் ஆதரவு நல்கியும் நமது பண்டைப் பெருமைகளைக்காத்து வருகின்றன. சித்திரம், ஓவியம், உருவக்கலை, கட்டிடக்கலை, அணிகலக்கலை முதலிய எல்லாக் கலைகளிலும் உள்ள -பண்டைய இன்றைய

வேலைப்பாடுகளை, வளர்ச்சிகளை இங்கே காணவும் இடம் உண்டு. இவ்விதமாக இந்த நிறுவனங்கள் பன்னூறு ஆண்டுகளாகவே சமதர்ம அடிப்படையில் எந்த ஒருசாராருக்கென்றுமில்லாமல் மக்கள் அனைவருக்கும் பொதுவாக எல்லாப் பணிகளையும் ஆற்றி வருகின்றன.

துயர் துடைக்கும் வழி எது ?

இவற்றின் சொத்துடைமைகளிலிருந்து கிடைக்கும் வருவாய்கள், மக்கள் பிரார்த்தனையாக வழங்கும் பொருள்கள் முதலிய எல்லாவற்றையும் பிற்காலத்துக்கெனச் சேமித்து வைத்துக் கொள்ளாமல் ஆண்டாண்டும் கிடைப்பவற்றை அந்தந்த ஆண்டிலும் மேலேகண்ட பலவற்றிற்கும் செலவு செய்து வருகின்றன, இச்செலவுகளுக்காகப் பொதுவாக எல்லா நிறுவனங்களும் செலவிடுவதைக் கணக்கிட்டால் பல லட்சக்கணக்கான அளவுக்கு ஆகும். அரசு எவ்விதம் மக்களின் நலம் பேணிக் காத்து மக்கள் நல்வாழ்வு அரசாகப் பணியாற்றி வருகிறதோ, அதேபோல இந்த நிறுவனங்களும் தம்தம் வழியில் மக்கள் நல்வாழ்வுக்குப் பேருதவியாக இருந்து வருகின்றன. மௌனமாக நடத்திவரும் இப்பணிகளைப் பற்றிச் சிந்தித்துப் பார்ப்பது பொறுப்புள்ள அனைவருக்கும் கடமையாகும். இவை செய்யும் பணிகள் பற்றி அரசுப்பணிகளுக்குக் கிடைக்கும் அளவு விளம்பரம் இல்லாததால் பொதுமக்கள் உண்மை நிலையை அறிவதற்கில்லை. ஆகவேதான் இந்த நாட்டில், இந்த நல்ல நிறுவனங்கள், ஏற்று நடத்தி வரும் மக்கள் பணி இன்ன அளவு என்பதைப் புரியாது பொதுமக்களும், தலைவர்கள் பலரும் இவற்றிற்காகப் பரிந்து பேசுவோர் இல்லாத காரணத்தால், இவற்றை அழிப்பதாக இவற்றின்சொத்துஉரிமைகளைப் பிரித்தெடுத்து மக்களுக்கு வழங்கிவிடவேண்டும் என்றும் துயர் துடைப்பதற்கு இதுவேவழி என்றும் பேசிவருகிறார்கள்.

சிந்தித்துப் பார்த்தார்களா ?

அவ்விதமே இவற்றின் நில உடைமைகளைப் பிரித்துக் கொடுப்பதற்கு அந்த நில உடைமைகள் இப்போது இந்த நிறுவனங்களின் நேரடி அனுபவத்தில் இருக்கின்றனவா ? அவை இவர்கள் சொல்லுவதுபோல விவசாயக் குடிமக்களிடம் தானே இருக்கின்றன ? நிலத்தைப் பிரித்துக்கொடுப்பதாயின் அந்த விவசாயக் குடிமக்களிடம் உள்ளதைத்தானே பிரித்துக் கொடுக்கவேண்டும் என்பவற்றை அவர்கள் சிந்தித்துப் பார்த்தார்களில்லை. இதுவல்லாது இந்த நிறுவனங்களில் பிரித்துக் கொடுக்க வேறு நிலம் ஏது ?

இவ்விதமில்லாமல் இந்த அறநிறுவனங்களின் நிலங்களை விவசாயக் குடிமக்களுக்கு பட்டா உரிமையோடு விற்றுவிடுவதாக இருந்தாலும், அந்தந்த நிலத்திலும் இப்போது பயிர் செய்து வருவோரை விட்டுவிட்டு வேறுயாருக்காவது கொடுத்துவிடுவது இயலுமா? அக் குடிமக்கள் விலைகொடுத்து இந்த நிலங்களை அடைவதானல் அவர்கள் இப்போது அடையும் பயனைவிட வேறு ஒரு சிறந்த பயனை அடைவதற்கு என்னவழி இருக்கிறது?

இலவசமாக அடைய இயலுமா?

இப்போது அக் குடிமக்கள் பெற்றிருக்கும் சாகுபடி உரிமையைக்கூட நல்லவிதத்தில் தக்க வைத்துக்கொள்ளவில்லை. அவர்களில் பலர் தங்கள் உரிமைகளைப் பிறரிடம் விட்டுவிட்டு அதற்காக ஒரு தொகை பெற்றுக்கொண்டுவிட்டார்கள். அதாவது அவர்கள் உரிமையை வேருெருவரிடம் தனி ஏற்பாடாக விற்றுவிட்டார்கள் என்றே கொள்ளலாம். நில உரிமையாளரின் அனுமதி பெற்றுக்கொள்ளாத நிலையில் கொடுத்து விட்டு இவர்கள் விவசாயக் கூலியாகவோ அல்லது வேறு விதமாகவோதான் பிழைப்பு நடத்திவருகின்ருர்கள். இவ்விதமாக இதிலும் நடுமனிதர்கள் ஏற்பட்டிருக்கிருர்கள். சாகுபடி உரிமை பெற்றிருப்பவர் பெயரால் இந்த நடுமனிதர் எவ்விதமான பொறுப்போ அல்லது நில உரிமையாளர் அனுமதியோ இல்லாத நிலையில் புகுந்துகொண்டு குத்தகைக்கு ஆண்டாண்டுக்கும் அளக்கவேண்டியதில் சாகுபடிதாரர் பெயரால் நிலுவை வைத்துவிடுகிருர்கள். இந்த ஏற்பாட்டுக்கு சட்டபூர்வமாக அங்கிகாரம் எதுவுமிருப்பதில்லை. மெய்யாகவே குத்தகை உரிமை பெற்றவர் பெயரால் நிலுவை தங்கிஞல் பெரும்பாலும் அவரிடமிருந்து வசூலிப்பதற்கு வழி எதுவுமில்லாத நிலையில் குத்தகை நிலுவைக்கு உத்தரவாதமும் இல்லையாகிவிடுகிறது. இந்த நிலையைத் தவிர்ப்பதற்குச் சட்டப்படி நடவடிக்கை எடுத்து மேலே கண்டபடி நிலத்தை வசம் செய்வதைத் தவிர வரவேண்டிய வருமானத்தைப் பெறுவதற்கு வழி இல்லாமற் போய்விடுகிறது. மேலும் இவ்விதம் வசமாகும் நிலத்தையும் இந்தச் சட்டத்தின் பாதுகாவலைத் தவிர வேறு உத்தரவாதங்கள் எதுவுமில்லாத நிலையில் இதேபோல உள்ள வேருெருவரிடம்தான் மீண்டும் குத்தகைக்கு விடவேண்டியதாகவே உள்ளது. அரசினருக்குச் செலுத்தவேண்டிய வரிகள் பலவும் செலுத்தும் கடப்பாடு இதேபோல் பலவாருகப் பயன் அடைந்து வரும் இக் குடிமக்களுக்கு எதுவும் இல்லை. அந்தப் பொறுப்பு நில உரிமையாளருக்கே. தொல்லையில்லாது நிலத்தில் விளைந்த நெல்லை அறுத்தெடுத்து அதன் முழுப் பயனையும் அடைவது

எளிதாகிறது. இப்போது அக்குடிமக்களுக்கு இவ்விதமிருக்கும் குத்தகை உரிமையையே தங்கவைத்துக்கொள்ள இயலாத பொழுது நில உடைமை உரிமை பெற்றுவிட்டால் அவ்விதம் பெறுவதால் மட்டும் அவர்கள் நிலை எவ்விதம் உயரக் கூடும்? மேலும் அதற்கான பண வசதி எங்கிருந்து அவர்களுக்குக் கிடைக்கப்போகிறது? நில உடைமை உரிமை மாற்றத்தில் இந்த அறநிறுவனங்களின் நில உடைமைகளை அதற்குரிய விலை எதுவும் கொடுக்காமல் இலவசமாகப் பெற்றுக்கொள்ளத்தான் இயலுமா?

மாற்று ஏற்பாடு என்ன?

நிலத்தை இழந்துநிற்கும் நிலையில் நமது அறநிறுவனங்கள் ஆக்கப்பட்டால் அவற்றில் நடைபெறவேண்டிய வழிபாடுகள், பிற தொண்டுகள், அவற்றில் பணிபுரிந்துவரும் மக்களுக்குப் பாதுகாவல், அவர்கள் வேலையிழந்து துயருரு வண்ணம் அவர்களுக்கு ஊதியங்கள் நிலையாகக்கொடுத்துவருவதற்குள்ள மாற்று ஏற்பாடுகள் எதுவும் இதுவரை சொல்லப்படவில்லை. இந்த நிலங்களின் உரிமை குடிகளுக்கு வழங்கவேண்டுமென்று அறிவுரை வழங்கியிருக்கும் திரு. ஜெயப்பிரகாஷ் நாராயணன் அவர்களும் இவற்றிற்கு மாற்று ஏற்பாடு குறித்துச் சிந்தித்துப் பரிந்துரை எதுவும் மொழியவில்லை.

வரிப் பளு அதிகமாகும்;

இப்போது மக்களின் பொதுநலத் தொண்டுகளுக்கென இந்த நிறுவனங்கள் ஆற்றிவரும் பங்குப் பணிகளையும் அவற்றிற்காக இவை செலவிட்டுவரும் பல லட்சக்கணக்கான பணப் பொறுப்பையும் அரசினர்தான் ஏற்றுக்கொள்ள வேண்டிவரும். அதற்கு அரசு, எங்கிருந்து பணம் தேட இயலும்? மீண்டும் மக்களிடமிருந்துவரிகளாகவும்பிறவாகவும்வசூலித்துத்தானே செலவு செய்யவேண்டிவரும் ஆக வரிப்பளு மேலும் அதிகமாகும்.

கடமையை ஆற்றுவார்களாக

நம்நாட்டில் சிந்திக்கும் திறன் உள்ளவர்களும் - தெரிந்தவர்களும் - பொறுப்புள்ளவர்களும் மௌனமாக இருந்து வருகிறார்கள். இவர்கள், நமது பண்டைய கலாசாரம், பண்பாடு, ஆஸ்திக உணர்வு இவற்றில் நாட்டமுடையவர்களாக இவற்றைச்சிந்தித்து இவற்றைப்பற்றிய கருத்துக்களைத் தம்பொறுப்புணர்ந்து செயலாற்றவும் பேசவும் வேண்டியகாலம் வந்திருக்கிறது. பொது மக்களின் மனநிலைகளை அரசியலாருக்கு எடுத்துச் சொல்ல வேண்டிய காலமாக இதனைக்கருதி அவர்கள் தம் கடமையை ஆற்றுவார்களாக.

உ
குருபாதம்

பெண்ணாகடம் ஸ்ரீ மெய்கண்டதேவ நாயனார்

## குருபூஜை விழாவில் (26—10—73)

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம்

26 ஆவது குருமகாசந்நிதானம்

## ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

வழங்கியருளிய

# ஆசியுரை

பண்டைமறை வண்டரற்றப் பசுந்தேன் ஞானம்
பரிந்தொழுகச் சிவகந்தம் பரந்து நாறக்
கண்டவர்இ தயகமல முகைக ளெல்லாங்
கண்திறப்பக் காசினிமேல் வந்தஅருட் கதிரோன்
விண்டமலர்ப் பொழில்புடைசூழ் வெண்ணெ மேவும்
மெய்கண்ட தேவன்மிகு சைவ நாதன்
புண்டரிக மலர்தாழச் சிரத்தே வாழும்
பொற்பாதம் எப்போதும் போற்றல் செய்வாம்.

— சிவஞான சித்தியார்.

அன்பர்களே !

இன்றையநாள் ஸ்ரீமெய்கண்ட தேவ நாயனாரின் குருபூஜைத் திருநாள். இப்புனிதநாளை இரண்டு நாட்களாக ஸ்ரீ மெய் கண்ட தேவ நாயனாரின் அருள் வாழ்வினையும் அவர்தம் ஞான நூலாகிய சிவஞான போதத்தையும் நினைவு கூர்ந்து சிறப்பாகக் கொண்டாடுகின்றீர்கள்.

### குரு என்பதன் பொருள் :

குருபூஜை என்பது ஞானசாத்திரத்தை அறிவுறுத்தி உயிர் கள் உய்யும் வழியை உபதேசித்த குருமூர்த்திகளுக்குச் செய்யப் பெறும் பூஜையாகும். குரு என்றால் யார் ? குரு என்னும் சொல் லுக்குப் பொருள் என்ன என்பது பலருக்குத் தெரிவதில்லை.

குருவை உலகியல் அறிவு உணர்த்தும் குரு என்றும் உண்மை ஞானம் உணர்த்தும் குரு என்றும் இருவகையாகக் கொள்வர். 'கு' என்பதற்குப் பாவம்-அறியாமை என்பன பொருளாகும். 'ரு' என்பதற்கு நீக்கம் என்பது பொருளாகும். ஆகவே குரு என்ற சொல்லுக்கு அறியாமையையும் பாவத்தையும் போக்குபவர் என்பதே பொருளாம். ஆன்மாக்களின் அறியாமையைப் போக்கி, அவை கடைத்தேற வழிகாட்டி. ஞான நெறியை உபதேசிக்கும் குருவினைத் தக்கவர்மூலம் அறிந்து அவரைச்சார்ந்து ஒழுகினால் நமது பிறவித் துன்பங்கள் நீங்கும்; பேரின்பம் தலைப் படும்.

## குரு இருதிறப்படுவர் :

தமிழில் குரு ஆசிரியர் எனப்படுகின்றார். ஆசு - குற்றம். இரிதல்-நீக்குதல். மனக்குற்றங்களை - அறியாமையை நீக்குபவர் - என்பது தான் ஆசிரியர் என்ற சொல்லுக்குப் பொருள். எனவே உலகியற் பொருள்பற்றிய அறியாமையை நீக்குகின்றவர் பள்ளி ஆசிரியர். நிலையுடைய பொருள்கள் இவை, நிலையில்லாத பொருள்கள் இவை என்று உணரமாட்டாத அறியாமையை நீக்கி உணர்வரிய மெய்ஞ்ஞானத்தை வழங்குபவர் ஞானாசிரியர். அவரே குரு என்ற சொல்லால் பெரும்பான்மையும் அழைக்கப் பெறுகின்றார். மெய்கண்டார் சைவ சமயத்தினர் அனைவருக்கும் ஞானகுருவாக விளங்குபவர். அத்தகைய ஞானகுருவை உணர்ந்துகொள்வதோடு அவரை வழிபடவும் அவர் வழங்கிய மெய்ப்பொருள்களை உணர்ந்து உய்திபெறவுமே ஸ்ரீ மெய்கண்ட தேவரது குருபூஜைத் திருநாளாகிய இந்நாளில் சொற்பொழிவுகளையும் வழிபாடுகளையும் நிகழ்த்துகின்றீர்கள். குருவின் உபதேச மொழிகளை உட்கொண்டு சிந்தித்துத் தெளிவதே சைவப்பெருமக்களின் தலையாயகடனாகும்.

## குருவும் சிவமும் வேறல்லர் :

இறைவனே கண்ணுதலும் கண்டக்கறையும் மறைத்து மண்ணிடையில் மாக்கள் மயல்போக்க மானிடவுருவில் குருவாக வருகிறான் என்பது சித்தாந்தச் செந்நெறியின் முடிபு. இதனையே திருமூலரும்,

" குருவே சிவமெனக் கூறினன் நந்தி
குருவே சிவமென் பதுகுறித் தோரார்
குருவே சிவனுமாய்க் கோனுமாய் நிற்கும்
குருவே யுரையுணர் வற்றதோர் கோவே.

என்று கூறியுள்ளார். இந்தப் பாடலுக்குப் பொருள் விளக்கம் தேவையில்லை. இத்தகைய குருமூர்த்தியைக் காண்பதும், அவர் அருள்வாக்கைக் கேட்பதும், அவர் திருநாமத்தை ஓதுதலும் அவர் திருவுருவை அல்லும் பகலும் அனவரதமும் சிந்தித்தலும் நமக்குச் சிந்தனைத் தெளிவையும் தெளிந்த அறிவையும் நல்க வல்லனவாம். இதனையும் திருமூலர் பாடல் நமக்குத் தெளிவிக் கிறது.

"தெளிவு குருவின் திருமேனி காண்டல்
தெளிவு குருவின் திருநாமஞ் செப்பல்
தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்
தெளிவு குருவுரு சிந்தித்தல் தானே"

அழுக்கு நீங்க வழி :

அழுக்கு என்பதைச் சித்தாந்த பரிபாஷையில் 'மலம்' என்று குறிப்பிடுவர். மலம் என்றாலும் அழுக்கு என்றாலும் ஒன்றுதான். அழுக்கு எல்லாப் பொருள்களிலும் பற்றி உள்ளது. மனத்தி லும் அழுக்குச் சேர்கிறது.

நித்தம் விளக்கும் பாத்திரங்கள் தூய்மையாக இருக்கும். பலநாள் விளக்காத பாத்திரங்கள் புளியால் தூய்மை பெறுவ தில்லை. கடைசல் பிடித்தால்தான் அவை அழுக்கு நீங்கித் தூய்மை பெறும். அதுபோல உள்ளத்து அழுக்கையும் நாளும் நாளும் நீக்கவேண்டும். அதற்காகவே ஞானநூல்களை நாளும் படித் தல் வேண்டும் என்று சான்றோர்கள் வற்புறுத்துகின்றனர். படித்திருந்தும் பயிற்சி இல்லை என்றால் படித்தனயாவும் மறந்து விடும். "சித்திரமும் கைப்பழக்கம் செந்தமிழும் நாப்பழக்கம்" என்ற பழமொழி இதனை நன்கு வலியுறுத்தும். நாள்தோறும் படித்து வரும் பயிற்சியால் புதிய தெளிவு தானே பிறக்கும். ஒரு நாள் செய்யும் குருபூஜையில் - வழிபாட்டில் மட்டும் இவையாவும் கிடைத்துவிடமாட்டா. ஆண்டுதோறும் இவ்விழாக்களை நடத்து தலாலும், சாத்திரங்களையும் தேவாரத் திருமுறைகளாகிய தோத்திரங்களையும் நாம் அடிக்கடி கற்பதாலும் தெளிவு பெறலாம்.

சிவஞானபோதம் தந்தவர் :

வேத ஆகமங்களிலும் தேவாரத் திருமுறைகளிலும் பரந்து கிடக்கும் சித்தாந்த சாத்திரச் செம்பொருட் கருத்துக்களை ஒன்று திரட்டி வகைப்படுத்தி, எளிமையாகத் தமிழில் சுவையாக

சிவஞான போதம் என்ற நூல்வழியாக முதன்முதலில் தந்த பெருமை மெய்கண்டார்க்கே உரியது. வேதாகமங்களின் முடிந்த முடிபாக என்றும் அழியாது நிலைபேறுடைய பொருட்கள் எவை என்பதனை மெய்கண்டார் விளக்குகிறார். மூன்று பொருள்கள் நிலையானவை என்பது அவரது சிவஞானபோதத்தில் விளக்கப்படுகிறது. கடவுள், உயிர்கள், உலகம் என்பன அவை. இவற்றை முறையே பதி, பசு, பாசம் என வடமொழியில் குறிப்பிடுவர். இப்பொருள்கள் மூன்றும் என்றும்உள்ளன; எனவேஇவற்றிற்கு அழிவில்லை. தோன்றுவன யாவும் அழியும்தன்மையன. உலகம் தோன்றி, நின்று அழிவது. தோன்றிநின்று அழியும் உலகத்திற்கு ஒரு தலைவன் வேண்டும், இத்தலைவனையே சிவபரம்பொருள் என்று குறிப்பிடுகின்றோம்.

## கடவுள் உண்மைக்கு எடுத்துக்காட்டு :

கடவுள் உண்டா இல்லையா என்ற ஐயம் எல்லோருக்கும் எழுகிறது. இதை எளிமையாகச் சொல்லவேண்டுமானால் உடலில் உயிர் இருக்கிறதா? இல்லையா? என்பதைப் புரிந்து கொண்டால் இதற்கு விடை புரிந்துவிடும். உயிரைக் கண்ணால் பார்க்க முடியாது. உடல் இயங்குவதைக்கொண்டு உயிர் உண்டு - இருக்கிறது என்பதை எல்லோரும் உணர்கிறோம்; ஒத்துக்கொள்கிறோம். அதைப்போலவே பூமண்டலம், சந்திர மண்டலம், சூரிய மண்டலம் அனைத்தும் அவற்றின் கதியில் சுழன்றுகொண்டிருக்கின்றன. அதனை ஊன்றிஉணர்வோமானால், அது கடவுள் என்ற சக்தியால் நடக்கிறது என்பதை நம்மில் பலரும் தெளிந்துகொள்ளலாம். இதனைக் குற்றாலக் குறவஞ்சி ஆசிரியர்,

"சாட்டி நிற்கும் அண்டமெலாம் சாட்டையிலாப்பம்பரம்போல்
ஆட்டுவிக்கும் குற்றாலத் தண்ணலார்"

என்று குறிப்பிடுகிறார்.

உடல் இயக்கத்தால் உயிர் உண்மை அறியப்படுவதுபோல உலக இயக்கத்தால் இறைவன் உண்மை அனுமானித்து அறியப்படுகிறது. இதயத்துடிப்பு உயிர் முயற்சியால் நடைபெறுகிறது. அந்த உயிரை உள் நின்று இயக்குபவன் இறைவன். உயிர்க்குத் துணையாக உதவுவன பஞ்சபூதங்களும், பஞ்சபூதங்களின் சேர்க்கையால் உண்டான உடம்பும், உடம்பில் உள்ள உறுப்புக்களுமேயாகும். இவை இன்றேல் உயிர் ஒன்றையும் அறியமுடியாது.

## முப்பொருள்களின் இயல்பு :

முப்பொருள்களில் இறை, உயிர் இரண்டும் அறிவுப் பொருள் உலகம் அறிவில்பொருள். 'இறை உணர்வும் உயிர் உணர்வும் ஒன்றல்ல. வேறுபட்ட தன்மையுடையன. இறை, உணர்த்தும் அறிவு. உயிர், உணரும் அறிவு. இதனைச் சூரியனும் கண்ணும்போல என்ற உதாரணத்தால் விளக்கலாம். சூரியன் காட்டும் ஒளி; கண் காணும் ஒளி. சூரிய ஒளியில்லாமல் கண் எதனையும் காணவியலாது. அது போலத்தான் இறைவன் உணர்த்தாமல் உயிர் எதனையும் உணராது. ஓரறிவுபெற்ற உயிர்களாகிய செடிகொடிகள் முதல் தேவர்கள் வரை அனைத்துயிர்களும் உணர்த்த உணருமேயன்றித் தாமே உணரா. இறைவனது அறிவு, பேரறிவு. உயிர்களின் அறிவு, சிற்றறிவு. இவ்வளவு நுட்பமான கருத்துக்களையும் இதுபோல இன்னும் பல நுண்பொருள்களையும் பன்னிரண்டே நூற் பாக்களில் நாற்பது வரியில் நமக்கு மெய்கண்டார் விளக்கியருளுகின்றார்.

## சிவஞானபோதம் உணர்த்துவன :

இந்நூலைப் பிரமாண இயல், இலக்கண இயல், சாதன இயல், பயனியல் என்னும் நான்கு இயல்களாகப் பகுத்துள்ளார். பிரமாண இயலில் முதல் மூன்று சூத்திரங்களால் முறையே கடவுள் (பதி) உண்மை, உலக (பாச - ஆணவம், கன்மம், மாயை) உண்மை, உயிர் (பசு) உண்மை என்னும் முப்பொருள் உண்மைகளைப் பிரமாணங்களால் விளக்குகின்றார். இலக்கண இயலில் நான்கு ஐந்து ஆறு சூத்திரங்களால் முறையே உயிரின் பொது இலக்கணம், பாசஇலக்கணம், பதியின்சிறப்புஇலக்கணங்கள் கூறப்படுகின்றன. சாதன இயலில் ஏழு எட்டுஒன்பதாம் சூத்திரங்களால் முறையே சாதனை செய்வன உயிர்களாகவும், அவைகட்குக் குருவாக வந்து அருள்புரிவோன் இறைவனாக வும், அந்த உயிர்கள் சாதனை புரிகின்றபோது வாசனாமலம் தாக்காது துணையாய் நிற்பது திருஐந்தெழுத்தாகவும் விளக்கப் படுகின்றன. பயனியலில் பத்து பதினொன்று பன்னிரண்டாம் சூத்திரங்களால் முறையே உயிரைப்பற்றி நிற்கின்ற பாச(துன்ப) நீக்கமும், சிவப்பேறு(இன்ப ஆக்கம்)பெற்றுச் சீவன் முத்தராகும் நிலையும், சீவன் முத்தராயினும் ஆலயத்தையும் அடியவர் வேடங்களையும் அரன் எனவே தொழுதுய்யும் பயனும் விளக்கப்படு கின்றன. பிரமாணம் முதலிய நான்கு இயல்களாலும் பதி, பசு, பாசம் என்ற முப்பொருளும் நான்கு வகையாக விளக்கப் பட்டிருப்பது உணர்ந்து மகிழத்தக்கது.

## சிவஞானபோதம் உணரவாரீர் :

இத்தகு அருள்நூலைச் சைவர்களாகப் பிறந்த ஒவ்வொரு வரும் முதலில் தெளிவாகப் புரிந்துகொள்வதும், அதனை மற்றவர் களுக்கு விளங்க எடுத்துரைப்பதும் இன்றியமையாததாகும். நுண்மையான இவ்வாராய்ச்சி நூல், முதலில் விளங்கவில்லை யென்றாலும், உள்ளம் வளர வளரத் தெளிவுபடும். 'கற்றலில் கேட்டலே நன்று' என்பது நமது ஆன்றோர் கொள்கை. இங்குள்ளோர் அனைவரும் சிவஞானபோதத்தை உணரவேண் டும் என்பதனாலேயே சென்ற ஆண்டில் நம் அன்பர் இரத்தின சபாபதியைக் கொண்டும், இவ்வாண்டு சுந்தரமூர்த்தி யைக் கொண்டும் சிவஞானபோத விரிவுரைகளை மாதந் தோறும் நிகழ்த்தியுள்ளீர்கள். நிகழாண்டில் டாக்டர் சிங்கார வேலரால் விரிவுரை நிகழ்த்தப்பெறுகிறது. அனைவரும் இவ்விரிவுரையைத் தொடர்ந்து கேட்டுத் தெளிவுபெற வேண்டும். நம்முடைய அறிவு - ஆற்றல் - தகுதிகளுக்கு ஏற்ப இந்நூல் விளங்கும். இங்ஙனம் இதனை அனைவரும் ஓதி உணர்வு பெறவேண்டும் என்பதற்காகவே சிவஞானபோதம் பன்னிரண்டு நூற்பாக்களையும் இதுபோது ஸ்ரீ மெய்கண்டார் ஆலயத்தில் கல்வெட்டாக அமைத்துள்ளோம். அச் சூத்திரங்களும் அதற் கான தெளிவுரையும் இன்று புத்தகமாகவும் அச்சிட்டு அன்பர் களுக்கு வழங்கப்படுகின்றன.

## நன்முயற்சிக்கு வாழ்த்து :

மெய்கண்டார் பரம்பரையில் வந்த சைவமெய்யன்பர்கள் பெருமுயற்சியுடன் இவ்வாலயத் திருப்பணிகளை நிறைவுறச் செய்து, குடமுழுக்கு நிகழ்த்தி, நித்திய நைமித்திக வழிபாடுகள் எல்லாம் குறைவற நிகழ்வித்து மாதச் சுவாதி வழிபாடுகளையும் ஆண்டுச் சுவாதிநாள் வழிபாட்டையும் சிவாசாரியர்களைக் கொண்டு மிகச் சிறப்பாக நடத்தி, கண்ணெனக் காத்து வருகின்றனர். இந்தப் பணிகளில் பங்குபற்றி வருகின்ற அன்பர்கள் அனைவரும் செந்தமிழ்ச் சொக்கன் திருவருளால் எல்லா நலங்களும் பெற்று உய்வார்களாக.

சிவஞான போதச் செந்நெறி வளர்க !

வாழ்க உலகெலாம்.

# அட்டைப்பட விளக்கம்

சோதியாய்ச் சுடராய்ச் சூழொளி விளக்காய்த் துலங்குகின்ற இறைவன் ஜோதிர்லிங்கமாகவே எழுந்தருளி விளங்கும் தலங்கள் பன்னிரண்டு. அவை சோமநாதம், ஸ்ரீசைலம், உஜ்ஜைனி, ஓங்காரம், வைத்தியநாதம், பீமசங்கரம், இராமேசுரம், நாகேசம் வாரணாசி(காசி), திரியம்பகம், கேதாரம், குஸ்மேசம் ஆகியவை.

சிவபெருமான் ஜோதி சொரூபமாகத் தோன்றிக் காட்சியளித்தது சிவராத்திரி காலமே. அதனால் இந்த ஜோதிலிங்க ஸ்தலங்கள் அனைத்தினும் சிவராத்திரி மிகச் சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றது. பன்னிரண்டு ஜோதிலிங்க ஸ்தலங்களில் சோமநாதமே முதன்மையாகச் சொல்லப்படுகின்றது. சோமன் (சந்திரன்) பூசித்துத் தக்கனது சாபத்தினின்றும் நீங்கி ஒளி பெற்றமையால் வந்த காரணப் பெயரே 'சோமநாதம்' என்பது. திருமால் அவதாரமாகிய கிருஷ்ணவதாரத்திலே தேகவியோகமான இடம் இந்தத்தலமே எனப்படுகின்றது.

குஜராத் மாகாணத்தில் சௌராஷ்டிர நாட்டில் உள்ள இக்கோயில் செல்வ வளத்தால் அன்னியப் படையெடுப்பிற்குக் காரணமாயிருந்தது. அதனால் இத்திருக்கோயில், கஜினிமுகமது முதலாகப் பல முகமதிய மன்னர்களால் பலமுறை அழிக்கப்பட்டுப் பலமுறை இந்து அரசர்களால் புதுப்பிக்கவும்பட்டது. இந்தோர் மகாராணி அகல்யாபாய் அம்மையால் புதுப்பிக்கப்பட்ட திருக்கோயில் இரண்டு அடுக்கு உள்ளது. அதில் நிலவறையில் சுயம்புலிங்கம் மறைந்திருக்கிறது. மேலே ஒரு இலிங்கம் உள்ளது. அது, பிரம்மாவினல் ஸ்தாபிக்கப்பட்டது என்பர். இவ்விலிங்கத்தை வழிபட்டோர் யமபயம் நீங்கப்பெறுவதுடன், தங்கள் முற்பிறப்பு நிகழ்ச்சியையும் அறிவர் என்பது இதன் சிறப்பு.

பாரதநாடு சுதந்திரம் பெற்றபின்னர், துணைப்பிரதமராக இருந்த சர்தார் வல்லபாய் படேல் அவர்களது முயற்சியால் முதன்முதலாக இத்திருக்கோயில் நன்முறையில் பல லட்சரூபாய் செலவில் அரசாங்க உதவிகொண்டு திருப்பணி செய்யப் பெற்று விளங்குகிறது. சர்தார் படேல் அவர்கள், தமது அரசியல் சாதனையைகாட்டிலும் இத்திருக்கோயிற் திருப்பணியால் மன நிறைவுபெற்றார் என்பது குறிப்பிடத்தக்கது. புதுக்கோவில் மேற்குக் கடற்கரையில் அலைமோதுமிடத்தில் கட்டப்பட்டிருக்கிறது.

இத்தகைய சோமநாத ஜோதிலிங்க ஆலயத்தை ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்கள் பன்னிரு ஜோதிர்லிங்கத் தலயாத்திரை மேற்கொண்டு இத்திருக்கோயில் திருமுன்னர் நிற்கும் காட்சியைத் தருகின்ற படமே சிவராத்திரித் திருநாளை (20-2-74)முன்னிட்டு இவ்விதழின் அட்டையை அணிசெய்கிறது.

# சிவஞானசித்தியார் தெளிபொருள்விளக்கம்

தருமையாதீனப் புலவர், சித்தாந்தக்கலைமணி

திரு. சி. அருணைவடிவேல் முதலியார்

( மலர் 33. இதழ் 2. பக்கம் 86 இன் தொடர்ச்சி )

## தோற்றுவாய்

கடவுள் வாழ்த்துக் கூறியபின்னர் அவையடக்கம் கூறுகின்றார்.

7. மாலயன்மா மறைஅறியா ஆதி மார்க்கம்
வையகத்தா கமம்வேதம் மற்றுமுள்ள
நூலையெலாம் உணர்ந்திறைவன் கழலே நோக்கும்
நோன்மைஅருந் தவர்முன்யான் நுவலு மாறு
வேலையுலா வுந்திரைகள் வீசி யேறி
வேறேழு மொன்றாகி நின்ற போது
சாலவுமான் குளப்படியில் தங்கி நின்ற
சலமதுதான் நேர்என்னும் தன்மைத் தாலோ. (1)

## இதன் தெளிபொருள்

சிவநெறி மரபும், வேதம், சிவாகமம் முதலிய நூல்கள் பலவும் உணர்ந்து சிவனது திருவடி ஒன்றையே பொருளாக அறிந்து அதனை அடைய முயல்கின்ற தவத்தவர்முன் அவர்களைப் போல யானும் சிவ நூல் செய்யும் முறைமை, ஏழு கடலும் ஒன்றாகி அலைவீசி நிற்கும் பெரு வெள்ளத்தின்முன் பசுவினது குளப்படியில் தேங்கி நிற்கின்ற நீர், 'யானும் உமக்கு நிகர்' என்று சொல்லும் முறைமை போல்வதாம்.

## விளக்கம்

இஃது இல்பொருளாகிய தொழில் உவமை.

'அறியா மார்க்கம்' என இயையும். ஆதி - சிவன். நோன்மை - உறுதி. 'யானும், தானும்' என்னும் இழிவு சிறப்பும்மைகள் தொகுத்தலாயின. 'நூல் நுவலுமாறு' என வருவித் துரைக்க. வேலை - கடல். 'வேலைக்கண்' என உருபு விரிக்க. ஏறி - ஏறுதலால். வேறு ஏழு - வேறு வேறாய் நின்ற ஏழு. 'சாலவும் நேர்' என இயைக்க. ஆல், ஓ அசைகள்.

## இதுவும் அது

8. நீடுபுகழ் உலகுதனில் மைந்தர் மாதர்
நேயமொடு தாம்பயந்த புதல்வர் வாயிற்
கூடுமொழி மழலையொடு குழறி ஒன்றும்
குறிப்பரிதா யிடினும்மிகக் குலவிப் போற்றி
மாடுநமக் கிதுவென்று கொண்டு வாழ்வர்;
அதுபோல மன்னுதமிழ்ப் புலமை யோர்என்
பாடுகவிக் குற்றங்கள் பாரார் இந்நூல்
பாராட்டா நிற்பர்அருட் பரிசி னாலே. (2)

## இதன் தெளிபொருள்

உலகில் உள்ள ஆடவரும், பெண்டிரும் தாம்பெற்ற மக்கள் பேசும் மழலைச் சொல் இனிது பொருள் விளக்காதொழியினும், அவர்கள்மேல் வைத்த அன்பு காரணமாக அதன் குறைபாட்டை நோக்காமல் பாராட்டி மகிழ்தல்போலத் தமிழ்ப் புலமை சான்ற ஆசிரியர்கள் என்மேல் வைத்த அருள் காரணமாக எனது செய்யுட்களில் உள்ள குற்றங்களை நோக்கி இகழாமல், புகழ்ந்து ஏற்றுக்கொள்வார்கள்.

## விளக்கம்

"நேயமொடு" என்பதில் ஒடு உருபு, ஆனுருபின் பொருள் தந்தது. மாடு - செல்வம். உவமைக்குக் கூறிய குறைபாட்டி னால், பொருட்கண்ணும் குறைபாடு வருவிக்கப்பட்டது. 'என் கவி, பாடு கவி' எனத் தனித்தனி இயையும். பாடு கவி வினைத் தொகை. 'பாடு' என்னும் விதப்பு, 'வந்தவாறே பாடுகின்ற' என்பது தோற்றி நின்றது. "பாரார்" என்பது முற்றெச்சம்.

## தோற்றுவாய்

இனி நூல்வழி கூறுவான் புகுந்து, முன்னர் நூல்களது உயர்வு இழிபுகளை உணர்த்துகின்றார்.

9. சுத்தவடி வியல்பாக உடைய சோதி
சொல்லியஆ கமங்களெலாம் சூழப் போயும்
ஒத்துமுடி யுங்கூட ஓரி டத்தே
ஒருபதிக்குப் பலநெறிகள் உளவா றுற்போல்;

பித்தர்குண மதுபோல ஒருகால் உண்டாய்ப்
பின்னொருகால் அறிவின்றிப் பேதை யோராய்க்
கத்திடும்ஆன் மாக்கள்உரைக் கட்டிற் பட்டோர்
கனகவரை குறித்துப்போய்க் கடற்கே வீழ்வார். (1)

## இதன் தெளிபொருள்

தூயதான அறிவே வடிவாய் நிற்றலைத் தனது இயல்பாக உடைய பதியாகிய சிவபிரான் அருளிச்செய்த திவ்விய ஆகமங்கள் சொல்லில் வேறுபட்டுத் தோன்றினும், அவை யாவும் பொருளில் ஒன்றுபட்டு ஒருங்கியே நிற்கும். (ஆதலின் அவற்றுள் எதன்வழி நிற்போரும் பெறும் பயன் முடிநிலை முத்தியேயாம்.) ஆகவே, திவ்வியாகமங்கள் பல் வேருதல், ஓர் ஊருக்குச் செல்லும் வழிகள் பல் வேருதல்போலத் தோற்ற மாத்திரையேயன்றி, உண்மை வேற்றுமையால் அன்றும்.

இனி, (பேதைமையுள் மூழ்கி நிற்றலையே இயல்பாக உடைமையால்) ஒருகால் அறிவும், மற்ரொருகால் அறியாமையும் உடையராகின்ற பசுக்களாகிய சீவர்கள் பித்தரது பிதற்றுரை போல அவ்வப் பொழுது தோன்றியவற்றைத் தோன்றியவாறே குழறிவழிந்து செய்த நூல்கள், ஒன்றிற்ருனே முன்னொடுபின் முரணி ஒருநெறிப்படா ஆதலின், அவற்றிற் பிணிப்புண்டோர் வீடுபெற முயன்று, பிறப்பில் வீழ்வோராவர்.

## விளக்கம்

சுத்தம், பண்பாகுபெயர். "சோதி" என்றது 'ஒளிவடிவாய் நிற்பவன்' என்றவாறு. ஆகவே, அவனுற் சொல்லப்பட்ட ஆகமம் திவ்வியாகமம் என்பது குறிப்பு. சூழப்போதல், வேறு வேறு திசையாய்ச் செல்லுதல். 'சூழப்போயும் ஒருபதிக்குப் பல நெறிகள் உளவானுற்போல் எல்லாம் ஓரிடத்தே கூட ஒத்து முடியும்' எனக் கூட்டுக. 'பல நெறிகள் உளவானுற்போல்' என்ருராயினும், 'உள்ள பல நெறிகள் ஒன்ருனுற்போல்' என்றலே கருத்து. இதனுனே, "ஒன்றதே பேரூர்; வழி ஆறு அதற்குள"* என்ற உவமை, சிவாகமங்களின்வழி நிற்கும் அகச் சமயங்கட்குக் கூறப்பட்டதே" என்றல் கருத்தாயிற்று. ஏனைய நூல்வழி நிற்கும் சமயங்கட்கு அவ்வுவமை பொருந்தாமை, "கனக வரை குறித்துப் போய்க் கடற்கே வீழ்வார்" என்பதனுல்

* திருமந்திரம் 5 ம் தந்திரம்.

விளக்கப்பட்டது இஃது அறியாதார் முற்கூறிய உவமையைப் புன்னெறிகட்கும் கூறிக் குழியையும் வழியாகக் காட்டி மகிழ்வர். எனவே, "பல பல மதமும் ஈற்றின் ஒருவழிப் படலும் போலும்",† என்றதும் அகச் சமயங்களை நோக்கியதேயாயிற்று. "கனக வரை ……………விழ்வார்" என்பது ஒட்டணி வகை. இதனால் பதிநூலின் உயர்வும், பசுநூலின் இழிபும் விளக்கப்பட்டமை காண்க.

'வேதமும், சிவாகமமுமே பதி நூல்கள்' என்பதும், 'அதனால், அவையும், அவற்றொடு மாறுபடாத நூல்களுமே கொள்ளத் தக்கன; அவற்றொடு மாறுபடும் நூல்கள் பசு நூல்கள்; அவை கொள்ளத் தக்கன அல்ல' என்பதும் ஆசிரியர் துணிபாதலைப் பின்னர்ப் பலவிடத்தும் அறியலாகும்.

'அறிவு' என்பது பின்னர் வருதலால், முன்னர் வாளா, "உண்டாய்" என்றார் கத்துதல், வாளா இசையோசை படலித்தல். மெய்யுரையாமை பற்றி இவ்வாறு கூறினார். கனக வரை - பொன் மலை; மேரு மலை. "கடற்கு" என்றது உருபு மயக்கம். கனக வரை வடக்கிலும், கடல் தெற்கிலும் உள்ளன என்பதும் குறிப்பு. எனவே, வடக்கு நோக்கிச் செல்வதாகக் கருதிக்கொண்டு தெற்கிலே சென்று கருதிய இடத்திற்கு எதிரான இடத்தை அடைந்து அல்லற்படுவர் என்றதாம்.

## தோற்றுவாய்

இனி நூல்வந்த வழியோடு நூல் கொள்ளுதற்கு உரியாரையும் நூற்பெயரையும் கூறுகின்றார்.

10. போதம்மிகுத் தோர்தொகுத்த பேதை மைக்கே
பொருந்தினே ரிவர்க்கன்றிக் கதிப்பாற் செல்ல
ஏதுநெறி யெனும் அவர்கட் கறிய முன்னாள்
இறைவன்அருள் நந்திதனக் கியம்ப நந்தி
கோதில்அருட் சனற்குமா ரற்குக் கூறக்
குவலயத்தின் அவ்வழிஎம் குருநாதன் கொண்டு
தீதகல எமக்களித்த ஞான நூலைத்
தேர்ந்துரைப்பன் சிவஞான சித்தி யென்றே. (2)

† காஞ்சிப் புராணம் - நாட்டுப் படலம் 16.

## இதன் தெளிபொருள்

இந்நூலை, யான், வரலாற்று முறையானன்றி, அவரவர் தமது சீவபோத மிகுதியால் சில பொருள்களைத் தாம் தாம் அறிந்தவாறே கூறியுள்ள நூல்களையே மெய்ந்நூல்களாகக் கொண்டு அவற்றை ஓதி உணர்ந்து ஒழுகுதலில் திட்பம்பெற்று நிற்கும் அவர்கள் பொருட்டுச் செய்யாமல், 'வீடு பெறுதற்கு உரிய உண்மை நெறி யாது' என, வரலாற்று முறையான் வந்த நல்லாசிரியர்பால் வினவி, அவர் வாயிலாக அறிய விரும்பும் அத்தகைய நன்மாணாக்கர் அந்நெறியை அறிதற்பொருட்டாகவே செய்கின்றேன்.

(அதனால், யான் எனக்குத் தோன்றியவாறே சிலவற்றைக் கூறி நூல் செய்யாமல்) முன்பு ஒருகால் சிவபிரான் தனது திருவருட்கு உரியவராகிய நந்தி பெருமானுக்கு முதற்கண் செவியறிவுறுக்க, நந்தி பெருமான் தம் மாணாக்கர் பல்லோருள்ளும் சிறந்து விளங்கிய சனற்குமார முனிவர்க்குச் செவியறிவுறுக்க, அவ்வுண்மை நெறியை நிலவுலகத்தில் முதன் முதலாக எம் குருநாதராகிய மெய்கண்ட தேவர் பெறுதலால் சீவபோதம் நீங்கிச் சாக்கிரத்தே அதீதத்தைப் புரிந்து சிவமாய் நின்று, யானும், என்போலியரும் பசுத்துவம் நீங்கிச் சிவத்துவம் பெறுதற்குத் துணையாக எங்கட்குச் செய்து தந்த ஞான நூலைச் சிந்தித்து உணர்ந்தவாற்றால், அதன்வழி நின்றே நூல் செய்கின்றேன். அவ்வாறு செய்யப்படுகின்ற இந்நூற்கு, (இது மேற்கூறிய முதல் நூலின் வழியது என்பது தோன்ற,) 'சிவஞான சித்தி' என்றே பெயரிட்டுச் செய்கின்றேன்.

## விளக்கம்

'போதம்' என்பது சொல்லுவாரது குறிப்பால் பசுபோதத்தின்மேல் நின்றது. பேதைமை, அதன் காரியமாகிய நூலைக் குறித்த ஆகுபெயர். "பேதைமைக்கு" என்பது உருபு மயக்கம். ஏகாரம், மெய்ந்நூல்களினின்றும் பிரித்தலின் பிரிநிலை. 'பொருந்தினோராகிய இவர்க்கன்றி, எனும் அவர்கட்கு அறிய உரைப்பன்' என இயைத்து முடிக்க. தொகுத்தற்கும், அறிதற்கும் செயப்படு பொருள் வருவித்துக்கொள்க "குவலயத்தின் எம் குருநாதன் கொண்டு" என்றமையால், முன்னைய நிகழ்ச்சிகள் கைலைக்கண் நிகழ்ந்தவை என்பது விளங்கும். விரிவஞ்சிக் கைலைக்கண்ணவாகிய பிற வரலாற்றை ஓதிற்றிலர். அவற்றைப் பின்னர்ப் புடைநூல் ‡ செய்த ஆசிரியர் விரித்தல் காண்க.

---

‡ சிவப்பிரகாசம்

இவ்வாறு, 'வழியைக் கொண்டு' என இரண்டன் உருபு விரியாது, "எந்தை சனற்குமரன் ஏத்தித் தொழ இயல்பாய் - நந்தி உரைத்தருளும் ஞானநூல்" என்பதொரு வெண்பாப் பற்றி, 'வழியாற் கொண்டு' என மூன்ருவது விரித்துரைப்பின் அது, "மின்னமர் பொழில்சூழ் வெண்ணெ மேவிவாழ் மெய் கண்டான் நூல்" எனவரும் சுபக்கச் செய்யுளோடும், "தெரித்த குரு முதல்வர் உயர் சிவஞானபோதம் செப்பினர்" என ஓதும் புடை நூலோடும் மாறுகொள்ளும். "எந்தை சனற்குமரன்" என்னும் வெண்பாவைச் செய்தார் இவர் என்பது அறியப்படாமையால், அதனையேபற்றி, மரபு வழி வந்த நல்லாசிரியரது வாய்மொழிக் குப் பொருள் காண்டல் பொருந்தாதாம்.

இனி, "நந்தி உரைத்தருளும் நூல்" என்றதன்பேலும், 'இதன் முதல் நூல் இரௌரவாகமத்துப் பாச விமோசன படலத்துக் கூறப்பட்டது' என விரிப்பர்; அவற்றுக்கெல்லாம் பண்டை நூற்சான்று ஓரிடத்தும் இல்லை என்க.

"போதம் மிகுத்தோர் தொகுத்த பேதைமை" என்றதனுல், போதம் நீங்கித் திருவருள் மிகுத்தோர் செய்வன மெய்ந்நூலாதல் குறிக்கப்பட்டமை காண்க. அங்ஙனம் இன்றேல், உண்மை நூல்கள் காலந்தோறும் தோன்றி விளங்குதற்கு வழியில்லாதுபோம் என்க.

'கொள்ளுதலால்' என்பது "கொண்டு" எனத் திரிந்து நின்றது. மெய்கண்ட தேவர் செய்தளித்த நூலின் பெயர் சிவ ஞானபோதம் எனப் புடைநூலில் கூறப்படுதல் காண்க. "எம் குருநாதன், எமக்களித்த" என்பவை ஏனைமாணுக்கரையும் உளப்படுத்துக் கூறியவை ஆதலின், "உரைப்பன்" என்றது பால் வழுவாகாமை அறிக.

## நூற் கருத்து

தோற்றுவாய் :- இனி நூல் நுதலிய பொருள் கூறுகின்ருர்.

11. இறைவனையும் இறைவனுல் இயம்பும் நூலும்,
ஈண்டளவும் பொருளியல்பும் வேண்டுஞ் செய்தி
முறைமைகளும் பெத்தமொடு முத்தி யெல்லாம்
மூதுலகில் எமக்கியன்ற முயற்சி யாலே
சிறையுலவும் புனல்நிலவித் தோன்றும் பேய்த்தேர்ச்
செய்கைபோல் உண்டாய பொய்கொள் மார்க்கத்
துறைபலவும் கடாவிடையால் சொல்லிப் போக்கித்
துகள்தீர இந்நூலில் சொல்ல கிற்பாம். (2)

## இதன் தெளிபொருள்

இந்நூலில் முன்னர், அணையில் நிரம்பி நிற்கும்நீரின் தோற்றம்போலத் தோன்றுகின்ற கானலின் மயக்குப்போல, யாது மறியா மக்களை மெய்ச் சமயம்போலத் தோன்றி மயக்கு கின்ற பொய்ச் சமயங்களின் வகைகள் பலவற்றையும் தடை விடை முறையால் மறுத்து நீக்கிப் பின்னர், உண்மையான இறைவன் இவன், அவனால் சொல்லப்பட்ட உண்மை முதல்நூல் இது, அதன்வழி நின்று பொருள்களது உண்மையைத் துணியும் அளவை முறை இது, அங்ஙனம் துணியப்பட்ட பொருள்களின் இயல்புகள் இவை, அக்கட்டினின்றும் நீங்குதற்குச் செய்யத் தக்க முயற்சி முறைகள் இவை, அம்முயற்சியால் அடையும் பயனாகிய வீடு இத்தன்மைத்து என்னும் இவற்றையெல்லாம் குற்றமின்றிச் சொல்லுவோம்.

### விளக்கம்

"இந்நூலில் சிறை உலவும் புனல் நிலவி............போக்கி, இறைவனையும்............எல்லாம் துகள்தீர எமக்கியன்ற முயற்சி யாலே மூதுலகில் சொல்லகிற்பாம்' எனக் கூட்டி உரைக்க.

'இறைவன்' முதலாக 'முத்தி' ஈறாக உள்ளவையே சுபக் கத்திற் சொல்லப்படும் பொருள்களாதலும், "போக்கிச் சொல்ல கிற்பாம்" என்றதில், போக்குதல் பரபக்கமும், சொல்லுதல் சுபக்க மும் ஆதலும் அறிக. பொய், பொய் என்று விளங்கினாலன்றி, மெய், மெய்என்பது விளங்காது ஆதலின், முதற்கண் பொய்கொள் மார்க்கத் துறை பலவற்றையும் எடுத்து ஓதிப் போக்குகின்றார். இது, முதல் நூலாகிய சிவஞானபோதத்தின் அவையடக்கத்தில்,

"தம்மை — உணரார் உணரார்; உடங்கியைந்து தம்மிற்
புணராமை கேளாம் புறன்"

என்பதில் குறிப்பால் அமைந்து கிடந்தது. எனவே, அக் குறிப்பின் விரிவே பரபக்கம் என்பது உணர்க.

"புனல் நிலவி" என்பது, 'புனல்போல நிலவி' என உவமத்தொகை. 'நிலவ' எனவும் பாடம் ஓதுப. அவ்விடத்து, 'நிலவ' என்பதற்கு 'பொய்யாய்த் தோன்ற' என உரைத்தல் அவரது கருத்து. செய்கை இங்கு தன்மை. மார்க்கம் - நெறி; சமயங்கள். துறை - அவற்றின் அக வேறுபாடுகள். தற்போத வழிநில்லாது குருவருள் வழிநின்று செய்தலால், மெய்யே மெய் யாய் விளங்கும் என்பது பற்றி. "துகள் தீரச் சொல்லுவாம்" என்றார். இனி, 'மாணக்கர் குற்றந் தீர்ந்து உய்தற் பொருட்டு இறைவன் முதலியவற்றை இந்நூலில் சொல்லகிற்பாம்' என உரைத்தலும் ஆம்.

இவ்வாறு பாயிரம் கூறியபின், நூல் கூறுகின்றார்.

பாயிரம் முடிந்தது. (தொடரும்)

சிவதருமோத்தரக் கட்டுரை எண் 21.

# துன்பங்களும் - துடைக்கும் வழியும்

தருமையாதீனப்புலவர், மகாவித்துவான்

திரு. ச. தண்டபாணி தேசிகர்

( மலர் 33, இதழ் 3, பக்கம் 97 இன் தொடர்ச்சி )

**கூட்டுபவன் இறைவனே :**

உயிர்கள் [மக்கள்] செய்த கருமமும் காலமும் கன்மத்தாலாய பயனும் தாமாகவே வந்து உயிர்களைச் சாரமாட்டா. இவைகள் ஜடப்பொருளாகிய அறிவற்றன ஆகையால் கூட்டுபவன் ஒருவன் வேண்டும். அவன் சிவனே என்பதை அறியாதவர்கள் கிணற்றில் போடப்பட்ட பூண்டையும் நீரும் போல மீள மீளப் பிறந்து இறந்து வருந்துவார்கள். அவர்களுக்கு நோய் முதலாயின வந்தால் மருந்துகளாலேயும், தீர்க்க முடியாது. உண்ட மருந்தாலேயே மேலும் துன்பம் விளையக்கூடும். மருந்தால் ஒழியும் நோய்களை மக்கள் அறிவார்கள். எல்லா நோய்களும் மருந்தாலேயே தீர்ந்து விடுகின்றது. நரையும் திரையுமாகிய துன்பங் பங்கள் முறையாக வந்துசேரும். அவை தருகின்ற துன்பத்திற்கோ அளவில்லை. போதும்போதாததற்குச் சாகுந்தருவாயில் யம தூதர்கள் செய்யும் துன்பங்களோ சொல்ல ஒண்ணுதன. மக்கள் உயிர்களுக்கு நூறு வயது என்று வேதாகமங்கள் சொல்கின்றன. ஆனாலும் அவரவர் செய்த புண்ணிய பாவங்களுக்கு ஏற்ப ஆயுட் காலம் அமைகின்றது. சில உயிர்கள் பிறந்த உடனே இறக்கும். ஒருசில சிலநாட்கள் இருந்து இறக்கும். பாலப் பருவத்தில் இறக்கும். யௌவன வயதில் இறக்கும். கிழமாய் இறக்கும். இங்ஙனம் இறக்கும் காலத்தில் யமதூதர்கள் வந்து வருத்துவார்கள். அவர்களால் அடைகின்ற துக்கம் சொல்லமுடியாதது.

**சாக்காட்டின் வகை :**

கால மிருத்தியு அல்லது வயது வந்து சாதலும், அவமிருத்தியு அல்லது கொலை, இடி, பாம்பு கடித்தல், தற்கொலை முதலான

வற்ருல் சாதலும் என இருவகைப்படும். இவற்றுள் அவமிருத்தியு வானது வைத்திய நூல்களில் சொல்லப்பட்ட மருந்துகள் சீந்திக்கொடி முதலியவற்றைக்கொண்டு செய்யப்படும் யாகங்கள் மிருத்தியுஜெய மந்திர ஜெயத்தாலும், பெரிய மகான்களுடைய கிருபையாலும், பத்தியங்களாலும், விலகக்கூடும். காலமிருத்தியு வானது வரும்போது அதனைத் தடுக்க வல்லோர் ஒருவருமில்லை. ஆதலால் பிராரத்த கன்மத்தைப் புசித்தபிறகு சாக்காடு வந்தே தீரும். அப்போது இதுவரை இருந்த உடலை விட்டு உயிர் பக்குவப்பட்ட கன்மத்திற்கு ஈடாக உடல், பொறி, புலன்களைப் பொருந்தும். உயிர் நீங்கும்போது படுகின்ற துன்பங்கள் அப்பப்பா அளவில்லாதன. உயிர் பிரிந்தவுடன் மண்கட்டிலே விரும்பும். உயிர் போங்காலத்து ஐயோ இவ்வளவு பொன்னை-பொருளை - மனைவியை - மக்களை - வீட்டை - காட்டை வைத்து விட்டுப் போகிறேமே. எவனே அல்லவா அனுபவிக்கப் போகிருன் என்று ஏங்கி ஏங்கி மாயும். பாம்பின் வாய்த் தேரைப்போலப் பலப்பல நினைக்கும். அந்த நாளில் பாது காக்க வல்லவர்கள் யார் ? நாம் இறந்தபின்பு நம்மோடு வருவது நாம் செய்த புண்ணியம் ஒன்றுமே. புல் நுனியில் இருக்கின்ற பச்சைப் புழுவானது ஒரு நுனியைப் பற்றி மற்றென்றை விடுவது போல உயிர்களும் இறுதிக் காலத்து யாதனுசரீர மாகிய சூட்சும தேகத்தைப் பற்றிப் பூதசரீரமாகிய பருஉடலை விட்டுப் பிரியும். அப்போது நல்வினைகள் பழுத்து, பக்குவமானல் சொர்க்கத்தை யும் தீவினை மிகுந்தால் நரகத்தையும் அடையும்.

துன்பங்கள் அளவற்றன ஆனலும் ஆய்ந்து ஓய்ந்து பார்க்கும் போது சாக்காட்டைக் காட்டிலும் பெரிய துன்பம் ஒன்றும் இல்லை. சொல்லப் போனல் மரண துன்பத்தைக் காட்டிலும் பெரிய துன்பம் ஒருவனிடம் சென்று எனக்கு இன்ன தைக்கொடு என்று இரத்தல். அதனினும் பெரிய துன்பம் இரப்பவர்க்கு இல்லை என்றல்; ஆதலால் ஒருவரிடம் சென்று எதனையும் இரக்காமையும் தன்பால் வந்து இரந்தவர்க்கு இல்லை என்னது கொடுத்தலும் இம்மை மறுமை இரண்டற்கும் இன்பம் தருதலாம். எவன் ஒருவன் மண்ணுசை பெண்ணுசையை விட்டி ருக்கின்ருனே எவனுக்குப் பெண்டு பிள்ளை வீடுவாசல் என்ற ஆசை இல்லையோ, புகழில் விருப்பம் இல்லையோ அவனே சுத்தன். அவன் தேவலோகத்திலும் சென்று இன்பத்தோடும் பொருளோடும் வாழ்வான்.

நாம் இவ்வுடலை எடுத்த நாள்முதல் உணரும் துன்பங்கள் பல. இன்பங்கள் சில. இவற்றை ஆராய்ந்து இன்பத் துன்பங் களை வெறுத்து அனுதி முத்த சித்தனுகிய சிவபெருமானிடம்

அன்பு பூண்டு. அவன் ஆணையால் உடலையும் மலமாயா கன்மங்களாகிய துக்கத்தையும் ஒழித்து விளங்குவான்.

## ஆசையின் வகைகள் :

ஆசை இரண்டு விதம். ஒன்று அனாதிகாலந்தொட்டு வேண்டுதல் வேண்டாமை இல்லாத சிவபெருமான் அருளைப் பெற்று வேதாகமங்களின் வழியிலே தவறாமல் நடக்கும் இயல்பு. மற்றொன்று நல்வினை நீங்கிய அறிவு மயக்கத்தால் இதுவே நல்வினை என்று செறுக்குற்றுச் செய்யும் தீவினைகள். ஆகையால் உடல் எடுத்த உயிர்கள் நல்வினை தீவினைப் பயன்களை இறைவன் அருளால் அனுபவிக்கும். உயிர்கள், அங்ஙனமாகிய ஆசைகளி னின்று நீங்கி வயிராக்கியம் எனப்படும் பற்றறுதி உண்டான பொழுது மோட்சத்தைக் கொடுக்கும் என்பதே பழைய தொன்னூல் துணிபு.

## ஒரு துன்பமும் இல்லாதிருப்பதற்கு உரிய உபாயம்:

மேலும் மேலும் கன்மத்தை வளர்ப்பது ஆசை. ஆசை முதலாகிய தீய குணங்கள் வயிராக்கியத்தால் நீங்கும். ஆசை நீங்கக் கன்மம் நீங்கும். கன்மம் நீங்க உடலுக்குக் காரணமாகிய மாயை வலிகெடும். ஆணவத்தின் காரியமாகிய அஞ்ஞானம் முதலியன நீங்கும். அவை நீங்க, பாசத்தை நசிக்கச் செய்பவனும் தனக்கு ஆணவம் முதலான குற்றங்கள் இல்லாதவனுமாகிய சிவபெருமானின் திருவடித் தாமரைகளை அனுபவித்து இருத்தலே வேறொரு துன்பம் இல்லாமைக்கு ஏற்ற உபாயமாம். அத்தகைய அநுபவம் உடைய முத்தான்மாக்களுடைய ஞானம் ஏனைய உயிர்களுடைய ஞானம் போல ஏகதேசம் ஆனது அன்று; சிவபரம் பொருளைப் போல அனைத்தையும் ஒருசேர அறிதலாகிய வியாபக ஞானமாம். ஏகதேச உடலைப் பொருந்திய ஆன்மாக்களுக்கு ஞானமும் ஏக தேசமாய் இருக்கும். வியாபகமாய் இராது. உடலாகிய பாசம் நீங்கினபோது உயிரைச் சார்ந்துள்ள அறிவை ஏகதேசம் என்று சொல்ல வேண்டியது இல்லை. சிவன் ஏகதேசி அல்லன். அவனது அறிவும் ஏகதேசம் அன்று. அதுபோல முத்தான் மாக்களின் அறிவும் சர்வவியாபியானதே. மரத்தின் ஆணிவேர் அற்றுப்போய் அதன் கொம்பு கிளை கொழுந்து வரை காய்ந்து போவது போல ஆணவமலம் நீங்கினால் உடல் மலமாயா கன்மத்தோடும் கெட்டு முத்தியை அடையும். அஃது எவ்வாறு எனின் வேதாகமங்களை ஐயந்திரிபற உணர்ந்து சிவானுபவி

ஆகிய ஞானசாரியனது கருணையைப் பெற்றுச் சிவனோடு ஒன்று பட்டிருப்பதே மேலான பேறு.

முத்தான்மா பிறப்பு இறப்புக்களை முழுதும் போக்கியவன், ஆணவாதி மலங்களில் வன்மையையும் வாட்டியவன். நித்தியன், உத்தமன், ஒருபொருளிலும் பற்றில்லாத சுத்தன். சுக ஞான சொரூபத்திலே என்றும் நிலைத்திருப்பவன். எக்காலமும் புதுமை செய்பவன். எல்லாம் உடையவன். அத்தகைய முத்தான்மா எல்லா ஆற்றலும் பெற்றிருந்தும் மற்ற ஆன்மாக்கள் உடலைப் பெறுவதற்காக, படைத்தல் முதலிய தொழிலைப் பண்ணுவானு எனின் பண்ணுவன் என்று உபதேசித்தான்.

இனி சொர்க்க நரக சேஷத்தை அனுபவித்தற்காக எடுக்கும் சரீர வகைகளைப் பற்றிக் கூறுவோம். அதனை நீ கேட்பாயாக. அகத்தியனே இந்த உலகத்தில் புண்ணியத்தைச் செய்தவர்கள் போகம் துய்த்தபிறகு மீளவும் பூமிக்கு வந்து நல்லகுலத்தில் பிறப்பார்கள் என்றும், பாவம் செய்தவர்கள் நரகத்தில் சென்று துன்பத்தை அனுபவித்து மீளவும் தாழ்ந்த குலத்தில் பிறப்பார் கள் என்று உனக்குச் சொல்கிறோம்.

இறைவன் அருளிய வேதாகம விதிப்படி நடந்தவர்கள் சொர்க்கலோகத்திற்குச் சென்று இன்பத்தை அனுபவித்தபின் பூமியில்அந்தணர்களாய்த்தோன்றுவர். இங்கும்வேதாகமங்களைச் சிறிதும் தவறுமல் ஓதி விபூதி உருத்திராட்சம் தரித்து, சிவ அர்ச்சனை செய்து எல்லா இன்பங்களையும் நுகர்வார்கள். அவர் களுக்கு ஒரு குறையும் நிகழாது, பின்னர் சிவலோகத்திற்குச் சென்று இன்பங்களைத் துய்த்து வயிராக்கியம் பிறந்த பின் பற்று அற்று சிவனது சீபாத கமலத்தைச் சேர்வார்கள்.

பாவத்தால் நரகத்தில் கிடந்து வருந்தித் தீவினைப் பயனைத் தொலைத்த பிறகு மீளவும் பூமிக்கு வந்து மரம், செடி, கொடி விலங்கு, நாய், நரி, நரகர்களாய்ப் பிறந்து வருந்துவார்கள். வஞ்சகர்களாயும், ஊமையராயும், செவிடராயும் குருடராயும் தொழுநோயராயும் பிறந்து துன்பப்படுவார்கள். நரகத்தில் வருந்தித் தொலைத்த பாவங்கள் போக மீதமுள்ளவற்றை இங்கு அனுபவிக்கின்றுர்கள். அதனை மேல்வரும் முப்பத்து ஐந்து பாட்டால் கூறுவாம்.

( தொடரும் )

# கடவுண்மா முனிவர் காட்டும் : : : : சிந்தாந்த நுட்பங்கள்

டாக்டர். திரு. சொ. சிங்காரவேலன் எம். ஏ., பிஎச். டி.

குறிக்கோள் :

சைவசமய அருட்டலைவர்கள் மூவர்க்கும் திருத்தொண்டர் புராணத்துள் வரலாறு கூறப்பட்டுள்ளது; மாணிக்கவாசகர்க்கு மட்டும் வரலாறு தெரிக்கும் தனிப் புராணம் இல்லை என்னும் குறையைப் போக்குவது ' திருவாதவூரடிகள் புராணம் "; கடவுள்மா முனிவர் பாடிய இந்நூல் திருவாசகம் அருளிய அருள் முனிவர் வரலாற்றைப் பக்திச் சுவையும் இலக்கியச் சுவையும் ததும்ப எடுத்துரைக்கின்றது. இதன் சித்தாந்த நுட்ப அமைப்பும் அழகும் குறித்துச் சிந்திப்பதே இக்கட்டுரைக் குறிக்கோள்.

அம்மை அருள் :

இத்திருவாதவூரடிகள் புராணம் சைவசித்தாந்த சாத்திர நுட்பங்கள் பலவற்றைத் தன்னுள்ளே கொண்டுள்ளது. பாயிரப் பகுதியில், அம்பலவாணர்க்கு வணக்கம் கூறும் திருப் பாடலில்,

" இதந்தரு மடந்தையொ டியைந்துயி ருடம்பு போல்
விதம்படு லகங்களில் விரிந்தொளி விளங்குவார் " (1)

என்று பாடுகின்றார். இன்பம், வீடு பேறு (போகம், மோட்சம்) என்னும் இரண்டனுள் இன்பம் அம்மையாலும், விடுபேறு அப்பனாலும் செயற்படுதல் பற்றி "இதந்தரு மடந்தை" என்றும், உடம்பெங்கும் உயிர் விரவியிருத்தல்போல, உலகெங்கும் இறைவன் விளங்கி யிருக்கின்றான் என்றும் சுட்டியுள்ளது உணர்ந்தின் புறத்தக்கது.

மணிவாசகர் அவதார மாண்பு :

மாணிக்கவாசக அடிகள் இளமைப் பருவத்தே வளர்ந்த சிறப்பை முனிவர் பின்வரும் பாடலில் உருவகம் பெற ஓதுவர்;

" தவமெனும் பெரியவித்துள் தங்கியே அங்குரித்துப்
பவமெனும் பங்க நீக்கிப் பயிலருட் குருத்துண் டாகி
அவமெனுங் களைகள் நீங்கி ஆக்குவோ னருளால் உண்மைச்
சிவமெனும் விளைவுண்டாக வளர்ந்தது தெய்வச் சாலி" (14)

நிட்காமிய மாகிய புண்ணியப் பேற்றை வித்தென்றூர்; பிறத்தலை முளைத்தல் என்றூர்; பிறவி என்பது கன்மத்தை நுகர்வித்துத் தொலைப்பிக்கும் கருவியாதலின் சேறு என்றூர்; மேலும் மேலும் புதிதாக விரிந்து வருதலால் திருவருளைக் குருத்து என்றூர்; உடம்பு முதலிய உலகம் அனைத்தும் மெய்ப்பொருள் என்று கொள்வது காலக் கழிவாதலுடன் கேடுபயத் தலின் களைகள் என்றூர். உடல், கலன், உலகம், ஊண் (தனு, கரணம், புவனம், போகம்) என்பனவற்றைக் கூட்டி முடிப்பவராதலின் சிவபரம்பொருளை உழவன் என்றூர்; பரமுத்தியைச் சிவவிளைவு என்றூர்; அதனை உலகிற்குத் தர வந்தவர் மணிவாசகர், என்பது கூறலுற்றூராதலின், அவரைத் தெய்வத்தன்மை பொருந்திய நெற்பயிர் என்றூர். இந்தப் பாடல் முற்றுருவகமாக நின்று, சைவசித்தாந்த நுட்பங்களை விளக்குதல் தெளிவு.

ஆகமத் திறன் :

" ஒக்கலையும் பிறகலையும் ஒழித்திடுமா கமகலையும்
எக்கலையும் கற்றுணர்ந்தார் ஈரெட் டாண்டெல்லை யினில்"(19)

என்புழி வீடுபேற்றிற்கு உரியநூலாயிருத்தல்பற்றி ஆகம கலை வேறெடுத்தோதப்பட்டது. வேதம் சைவத்திற்குப் பொதுநூல் என்றும், ஆகமங்கள் சிறப்பு நூல் என்றும் அருணந்தி சிவா சாரியார் கூறும் திருப்பாட்டின் கருத்தும் இதுவேயாதல் இரண் டினையும் ஒப்புநோக்குவார்க்கு இனிது விளங்கும். (சிவஞான. சுபக்கம் 8. சூத்து. 15)

" வேதநூல் சைவநூல் என்றிரண்டே நூல்கள்
வேறுரைக்கும் நூலிவற்றின் விரிந்த நூல்கள்
ஆதிநூல் அநாதியமலன் தருநூல் இரண்டும்
ஆரணநூல் பொது சைவம் அருஞ்சிறப்பு நூலாம்
நீதியினுல் உலகர்க்கும் சத்திநிபாதர்க்கும்
நிகழ்த்தியது நீண்மறையின் ஒழிபொருள் வேதாந்தத்
தீதில்பொருள் கொண்டுரைக்கும் நூல்சைவம் பிறநூல்
திகழ்பூர்வம்; சிவாகமங்கள் சித்தாந்தமாகும்."

## பற்றற்ற வாழ்வு :

கொடிய வினைத்துன்பத்தால் பாசம் நீங்காமல், பிறவிச் சிறையிற்பட்டு உழலும் உயிர்களையெல்லாம் நோக்கி இந்த உலக வாழ்வில் ஒரு பயனும் இல்லை என்று தெளிந்து, கூத்தாடுகின்றவர் உண்மைத் தன்மை வேறு, வேடம் வேறு ஆக நடிக்குமாறு போல மனத்தினின்று உலகப் பற்றை முற்றும் நீங்கியவராய் மணிவாசகர் பாண்டியனது நீதியை நிகழ்த்தி வந்தார் என்று கூறுவது, உலக வாழ்விற் பற்றற்று வாழ்ந்த அடிகளார் அருள் மனத்தின் மாண்பினைச் சுட்டுவதாகும்.

“ தீத்திற வினையினாலே சிறைப்படும் உயிரை யெல்லாம்
பார்த்தன ருலக வாழ்விற் பயனிலை யென்று தேர்ந்து
கூத்தினர் தன்மை வேறு கோலம் வேருகு மாபோல்
நீத்தவர் மனத்தின் முன்போய் நிகழ்த்தினர் வழுதிநீதி” (28)

"புளியம் பழம் ஒத்திருந்தேன்” என்று அடிகளார் திருவாசகத்திற் கூறுவது இங்கு ஒப்பிட்டுணரத்தக்கதாகும்.

## சிவசக்தி :

“ சிவாகமப் பொருள் கொண்டு, வினைப்போகங்கள் தொலையும்படியாகப் பரமுத்தியை அநுபவித்தற்கு ஒழுக்க நெறியாகிய இதனிற் செல்லுக என்று பக்குவ முற்ற ஆன்மாவைச் சிவசக்தி செலுத்துவது போல” செல்வப் பொருள் கொண்டு அமைச்சர்க்குரிய சூழ்ச்சிகள் தொலையும்படியாக ஞானசாரியனை அடைந்தனுபவித்தற்கு அரசன் செலுத்தினான் என்றும் எண்ணி இன்புறுதற்குரிய இவ்வுவமை இறைவன் ஆன்மாவிற்குச் செய்யும் உதவியை எடுத்துக்காட்டுவதாகவும், கடவுள் மாமுனிவரின் சாத்திர நுட்பத் திறனை விளக்குவதாகவும் அமைந்துள்ளது.

“ அத்தகு புத்தியொழிந்துயிர் அற்புத முத்தி பெறும்படி
உய்த்துள சத்தியுடன் பொரு ஒத்தனன் உத்தம பஞ்சவன்”

## பெருந்துறைப் பெயர்க் காரணம் :

திருப்பெருந்துறை என்னும் திருத்தலத்தின் பெயர்க் காரணத்தை முனிவர் மிக நயம்பெற விளக்குகின்ற திறம் வியந்து காணற்குரியது. கொடும் பிறவியாகிய கடலின்கண் வீழ்ந்து அழுந்துகின்றவர்கள் எல்லாரும் நம்புகின்ற சிவமூல மந்திரமாகிய ஐந்தெழுத்து என்ற புணையினைப் பற்றிக்கொண்டால்,

எய் பரம்பொருள் திருவருளால் முத்திக் கரையில் அவர்கள் ஏறும் பெறும் துறையே பெருந்துறை என்கின்றது பாடல் :

" வெம்பிறவி வேலேதனில் வீழ்பவர்கள் எல்லாம்
நம்புசிவ நாமமெனும் நற்புணை பிடித்தால்,
எம்பரன் அருட்கரையில் ஏறு துறையாமால்
அம்புவி மொழிந்துள பெருந்துறையதன்பேர் " (57)

மணிவாசகரின், "தனியனேன் பெரும்பிறவி" என்ற திருப்பாட்டு, "கரைகாட்டியாட்கொண்டாய் மூர்க்கனேற்கே" என்று முடிவது. அதன் கற்பனையே முனிவர்க்கு இவ்வாறு முகிழ்த்தது என்று கொள்ளலாம்.

### பந்தமறும் எல்லை :

திருப்பெருந்துறையில் தமது சீடர் வரவை எதிர்நோக்கிக் குருந்த மரத்து நிழலில் வீற்றிருந்த சிவபிரானது நிலையை முனிவர்,

" பந்தமறு மெல்லையது பார்த்தினி திருந்தார் " (64)

என்கின்றார். ஆன்மாவின் பாசக்கட்டு நீங்கும் காலமே இறைவனது அருள் வெளிப்படும் காலம் என்ற நுட்பக் கருத்து இங்குச் சுடர் விடுதல் காணலாம். "அற்றது பற்றெனில் உற்றது வீடு" என்று நம்மாழ்வாரும், "பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும்" என்று திருவள்ளுவரும் கூறியுள்ள செம்மொழிகள் நம் நினைவில் எழுகின்றன.

### அத்துவிதக் குறிப்பு :

இறைவன் உயிர்கள் பலவற்றோடும் கலப்பினால் ஒன்றாயும் பொருட்டன்மையால் வேறாயும் அத்துவித சம்பந்தம் உடைமையைச் சுட்டுவதே பின்வரும் பகுதி ;

" பொங்கு புனல் யாறுபல போய்விழு கடற்போல்
எங்குமுள நல்லுயிர்கள் எய்துமொளி யாகும்
திங்களணி வேணியர் "

### அணைந்தோர் தன்மை :

திருப்பெருந்துறைக்கு வரும் நெறியில் கரிய பூக்களைக் காயா மரங்கள் பூத்தன ; சிவந்த காந்தட்பூக்களைக் காந்தட் செடிகள் பூத்தன. இவற்றுக்குக் கடவுண்மாமுனிவர் காட்டும்

உவமைகள் இரண்டும் இரண்டு உண்மைப் பொருள்களை அடியொற்றி எழுகின்றன. தூய மனத்தை உடைய திருவாதவூர்ச் செல்வரை இனிப் பொய்ம் மயக்கம் தரும் பாசம் புல்லாது; அப்பாசம் போன்று காயா மலர்ந்ததாம். எவ்வகை மயக்கமும் நீங்கிய அடிகளார்க்கு 'இனிப் பிறவி இல்லை' என்று கையமைத்து தடுத்துக்காட்டுபவரைப் போலக் காந்தள் மலர்ந்ததாம்; அழகிய கற்பனையும் சித்தாந்த நுட்பமும் பொதுளிய அவ்வழகிய திருப்பாட்டு இது;

"செம்மனத்து வாதவூர்ச் செல்வர்தமைப் புல்லாத
பொய்ம்மயக்கம் தரும்பாசம் போலமலர்ந்தன பூவை
எம்மயக்கும் ஒழிப்பாருக்கு, இனிப்பிறவி யில்லையெனக்
கைம்மறிக்கு மவர்போல மலர்ந்தன அங்குள காந்தள்" (66)

செம்மனம் உடையாரைப் பாசமோ பாசஞானமோ பந்தியாது என்பதும், சிவன் முத்தர்க்கு இனிப் பிறவியில்லை, என்பதும் இங்குக் கடவுண்மா முனிவர் இவ்வுவமைகளின் வழியே வெளிப்படுத்தியுள்ள நுட்பங்கள். (தொடரும்)

---

EXTRACT FROM THE VISITOR'S BOOK
Dharmapuram Adhinam
Sri Sattanathaswami Devasthanam, Sirkazhi.

"Members of Sri Sharada Bhajana Mandali, Golden Rock visited the temple on 5-8-73. We were very much impressed by the unique architecture of the temple. The cleanliness of a very high standard which is very rare to see in temples and the staff working in the Temple are very courteous to devotees which is worthy of mention."

(Sd.) H. G. Venkatachaliah Setty,
Works Manager, Rly. Workshop,
5-8-73. Golden Rock.

"This temple at Sirkazhi typifies the old adage "cleanliness is next to Godliness.' The temple and surroundings are so clean and neat that one is automatically spiritually aroused."

(Sd.) P. V. Narayanaswami,
8-1-74. Divisional Supdt.
S. Rly. Tiruchi.

# சிவாகம ஸார ஸர்வஸ்வம்

சிவாகம வித்துவான், சிவாகமரத்னுகரம்

**சிவஸ்ரீ. S. சுவாமிநாத சிவாசாரியார்**

(மலர் 33. இதழ் 2. பக்கம் 101 இன் தொடர்ச்சி)

அப்படியே சகலப் பிராணிகளுடைய ஹ்ருதயம் வாழைப்பூ போன்றிருக்கும். அதன் மத்தியில் கர்ணிகையோடு எட்டு தளமுள்ள பத்மமிருக்கிறது இருதயம் சுவர்ணவர்ணமாகும். அதில் கமலம் நாலங்குலமாகும். நாபிக்குமேலெட்டு அங்குலம் பிரமாணத்தில் அந்த பத்மத்தின் தண்டு இருக்கும். அதில் துவாரமொன்பது இருக்கும். அது நாலு பக்கமும் முள்ளுடன் கூடியிருக்கும். அதின் கர்ணிகை கட்டைவிரல் கணுவுக்கொப்பான நுனியுள்ளதாய்க் கேசரத்தோடு கூடியிருக்கும் கர்ணிகையில் சூரியனும் அதன் நடுவில் சந்திரனும் அதன் நடுவில் அக்னியும் அக்னியின் நடுவில் மகேச்வரனும், சதாசிவனும், மகேசருமிருப்பார். அப்பால் பரமசிவனிருப்பர்.

— நிச்வாசகாரிகை.

இவ்வாறு சுபாவ சித்தமான இருதயகமலத்தில் சிவபூஜை செய்வது உத்தமோத்தமமாகும். இவ்வாறுள்ள இருதய கமலத்தில் சுவபாவ சித்தமாயிருக்கிற குண்டலிநீ சத்தியின் மேலே மேற்சொல்லும் வழியே ஆதார சத்தி முதல் பராசத்தி ஈருகத் தியானிக்கப்பட்ட ஆஸனத்தில் சிவனை மனதாலே பூஜிக்கவேண்டும்

அந்த சிவஸ்வருபம் தீபஜ்வாலை வடிவென்றதால் நாத ஸ்வருபமென்று சூசிக்கப்பட்டது. நாதமாவது ஹம்ஸம்.

प्राणिनां देहमध्येतु स्थितो हंसस्सदाशिवः ।

— मकुटागमम्

பிராணிகளுடைய தேஹமத்தியில் ஹம்ஸருபமாக சதாசிவன் இருக்கிருர். — மகுடாகமம்.

காதில் கட்டைவிரல் வைத்தால் உண்டாகும் சப்தம் நாதம். அது ஜ்வலிக்கின்ற அக்னிக்கு ஒப்பாகும். இவ்வாறு பரமசிவனைத் தியானம் செய்து மானதமாகவே, சத்தியால் கலக்கப்பட்ட அமிருததாரையால் அபிஷேகம் செய்து, வைராக்யமென்ற புத்திதருமமாகிய சந்தனத்தைச் சாத்தி (இதனால் புவனபோகத்திற்கு ஹேதுவான சரீரநாச முண்டாகும் அதனாலே மாயேயமான தனுகரண நாசமுண்டாகும். அந்த நாசத்தினால் மாயை, கர்மம் இவைகளின் நாசம் என்று மிருகேந்திரம் கூறுகிறது.) பிறகு அஹிம்ஸாபுஷ்பம் இந்திரிய நிக்ரஹபுஷ்பம், சாந்திபுஷ்பம், தயாபுஷ்பம், ஞானபுஷ்பம், தவம் என்ற புஷ்பம், சத்யபுஷ்பம், பாவபுஷ்பம் என்ற எட்டு புஷ்பங்களைச் சாத்தவேண்டும்.

அஹிம்சை :- பிறருக்கு வருத்தம் துக்கமுண்டாக்காம லிருத்தல்.

இந்திரிய நிக்ரஹம் :- தன்னிடம் விரும்பிவந்த ஸ்திரீயையும் தாய் என்று நினைத்து வணங்கி, தனது மனைவியுடன் இல்லறதருமத்திலிருத்தல்.

சாந்தி :- தன்னை ஒருவர் அடித்தாலும் கோபமில்லாமல் விகாரமின்றி இருத்தல்.

தயை :- லாபம் நஷ்டம் இவ்விரண்டிலும் சந்தோஷமாக விருத்தல்.

ஞானம் :- பாவசுத்தி.

தவம் :- குரு சுச்ருஷை, தந்தையின் வாக்ய பரிபாலனம்

சத்யம் :- உண்மையுடன் பேசுதல் முதலானது.

பாவம் :- சித்தசுத்தி,

बाह्या चाभ्यन्तराशुद्धिः शौचं भावाज्जलादिभिः ।

— शिवधर्मं

गङ्गातोयेन सर्वेण मृद्भारैश्च नगोपमैः ।

आमृत्योराचरन् शौचं भावदुष्टोनशुद्ध्यति ॥

பா்ஹ்யசுத்தி ஜலத்தினுலும் ஆப்யந்தரசுத்தி பாவத்தினுலும் உண்டாகிறது. — சிவதருமம்.

கங்கையின் ஜலத்தினுலும் மலைக்கொப்பான மண்ணுலும் இறப்பு வரையிலும் சுத்திசெய்துகொண்டாலும் பாவத்தினுல் தூஷிக்கப்பட்டவன் சுத்தியைப் பெறமாட்டான்.

மனம் என்னும் பாத்திரத்தில் ப்ராணன் என்ற அக்னி யிட்டு அஹங்காரம் என்ற தூபத்தையும் சிற்சத்தியாகிய தீபத்தையும் காண்பித்து உபசரித்து கந்தம் முதலானவற்றை சிரேஷ்டமான போக்யவஸ்துவாகவும், ப்ரதிவி முதலான பஞ்ச பூதங்களையும் நைவேத்யம், பானீயம், தர்ப்பணம், விசிறி முதலிய உபசார வஸ்துக்களாகவும் தோத்திரங்களாகவும் நினைக்கவேண்டும். இவ்வாறு மனோபாவனையினுல் நாத ருபமான மூலாதாரத்திலிருந்து உண்டான அந்தமந்திரத்தை ஜபம் செய்து சமர்ப்பணம் செய்யவேண்டும்

वह्नावेवमपि प्रपूज्य जुहुयात्पूर्वोक्त योगेन
तत्स्थानस्थाभिडया स्रुवेण च सुधामंते सुषुम्ना स्रुचा ।
पूर्णांतं हवनं समर्प्य कृतवानीशं क्षमाप्यादरा
दत्वेभ्याच विवर्जिते परपदे लीनस्समाधिं व्रजेत् ॥
— सिद्धांतसारावळि

மனோபாவனையாலே சுயமாகவே சித்தமாயிருக்கிற நாபி யாகிய குண்டத்தை ஹோமஸ்தானமாகப் பாவித்து, அதில் விதிப்படி சிவாக்னியை ஆவாஹனம் செய்து அதில் பரம சிவனை இருதயத்தில் பூஜித்தபடி பூஜித்து விந்து ஸ்தானத்தி லிருந்து பெருகுகின்ற அமிருத தாரையை ஆஜ்ய தாரையாக்கி இடையாகிய ஸ்ருவத்தினுல் நூற்றெட்டாகுதி செய்ததாகப் பாவித்து முடிவில் சுழுமுனையாகிய ஸ்ருக்கினுல் பூர்ணுகுதி செய்து நாடியின் வழியாக ஹிருதயகமலத்திலிருக்கும் இறை வனிடம் ஹோம சமர்ப்பணம் செய்து க்ஷமாபணம் தெரிவித்து, அஷ்டபுஷ்பம் சாத்தி முடிவில் சதாசிவாகாரம் முதலிய சுவரூப பாவாகாரமில்லாமல் நிஷ்கள ஸ்வரூபமான துவாதசாந்தத் தில் லயித்தவனுய்க் கொண்டு துவாதசாந்த பர்யந்தமேகா காரனுன சிவத்தியான ருபமான ஸமாதியைச் செய்ய வேண்டும். — சித்தாந்தசாராவளி.

இவ்வாறு மத்தியான்னகாலம் வரையில் புருவ நடுவில் சரத்கால சந்திரன்போல் பிரகாசிக்கின்ற ஜ்யோதிர்மயமான லிங்கத்தைத் தியானித்து அங்கே மனதையும் ப்ராணனையும் லயிக்கச்செய்து, போகியானவன் தன்மயனாய், சித்தம் சூந்நியமாகச்செய்ய வேண்டியது. சித்தம் நஷ்டமானால் சிதானந்தம் தானே பிறக்கும். இவ்வாறு செய்வது அணிமாதி குணங்களுக்கு ஆதாரமான சமாதியெனப்படும் — வாதுளாகமம்.

இவ்வாறு சமாதியெய்தி பூஜ்யன் பூஜகன் என்ற இரு பாவனையுடன் தான்சிவன் என்று மனத்தில் நினைத்து பாஹ்ய பூஜை செய்யவேண்டும்.

ஸ்தானசுத்தி, திரவிய சுத்தி, மந்திர சுத்தி சிவஹஸ்த பாவனை செய்துகொண்டு பஞ்சகவ்யபூஜை பஞ்சாமிருத கல்ப்பனம் முதலிய பூஜோபகரணங்களைத் தயார் செய்து கொண்டு இலிங்கசுத்தி செய்யவேண்டும்.

பேடகத்தில் பீமருத்ரனைப் பூஜித்துப் பிரார்த்திக்க வேண்டும். அதாவது,

निशाचरान्तकृद्देव देवस्य यजनार्थकम ।
शुद्धद्वारस्य सव्येतु गच्छत्वं हि प्रसीद मे ॥

அசுரர்களுக்கு அந்தத்தைச் செய்பவனான 'ஹே தேவ! பீமருத்ர! தேவனுடைய பூஜையின்பொருட்டு எனக்கு அனுக்ரஹம் செய் சுத்த துவாரத்தின் வலது பாகத்தில் வீற்றிரு!' என்று வேண்டிக்கொண்டு பெட்டியைத் திறந்து பெட்டியினுள் இருக்கும் இறைவனைப்பார்த்து

ओं नमो देवदेवेश सर्वलोकैक नायक ।
उत्तिष्ठस्नान कर्मार्थं आत्मरक्षार्थमेव च ॥

என்று பிரார்த்தித்து, இலிங்கத்தைக் கைகளால் எடுத்துப் பழைய வஸ்திரத்தை நீக்கி முன்பே ஷடுத்தாஸன பூஜை செய்யப்பட்டிருக்கும் ஸ்னானவேதியில் ஆஸனத்தில் வைத்து, காயத்ரியால் பூஜிக்கவேண்டும்.

( தொடரும் )

# கும்பகோணத்தில் மாசி மகம்

திரு. என். இராமகிருஷ்ண

மகாமகத்துக்கு உரிய தலம் கும்பகோணம். ஒவ்வொரு வருடமும் மாசிமகம் விசேடம். ஆழ்வார்களும் நாயன்மார்களும் பாடிய தலம் இது.

கோயில்களுக்குப் பெயர்பெற்றது தமிழ்நாடு. அதில் காஞ்சிபுரமும் கும்பகோணமும் கோயில் நிறைந்த ஊர்கள். சிவவிஷ்ணு ஆலயங்கள் இந்த இரண்டு தலங்களிலும் மிகுதியாக இருப்பது போல் வேறு எந்தத் தலத்திலும் இல்லை.

கும்பகோணம் என்றவுடனே மகாமகம் நினைவுக்கு வருகின்றது. மகாமகம், மாமாங்கம் என்று மருவி வழங்கும். அவ்விழா பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை நிகழும். பெருந்திரளாக மக்கள் கூடுவர். கங்கை முதலிய தீர்த்தங்கள் மகாமக காலத்தில் மகாமக தீர்த்தத்தில் கலப்பதாக ஐதிஹ்யம். அந்தத் தீர்த்தங்களாவன கங்கை, யமுனை, சரஸ்வதி கோதாவரி நருமதை, சிந்து, காவேரி, வேகவதி என்பவை.

" பூமருவும் கங்கை முதல் புனிதமாம் பெரும் தீர்த்தம்
மாமகந்தான் ஆடுதற்கு வந்து வழிபடும் கோயில் "

என்ற பாடல் இந்தச் சிறப்பைப் புலப்படுத்துகிறது.

இந்தக் தீர்த்தத்தில் ஒவ்வோராண்டும் மாசிமகத்தன்று நீராடுவது மிகவும் விசேஷம் என்று சொல்வார்கள். இந்தத் தலத்தின் தீர்த்தச் சிறப்பைத் திருநாவுக்கரசர்,

" தாவிமுதற் காவிரி நல் யமுனை கங்கை
சரசுவதி பொற்றாமரைபுட் கரணி தெண்ணீர்க்
கோவியொடு குமரிவரு தீர்த்தம் சூழ்ந்த
குடந்தைக் கீழ்க் கோட்டத் தெம் கூத்தனாரே "

என்று பாடுகின்றார்.

பிரளய காலம் வருவது அறிந்த பிரம்மதேவன் கயிலையை அடைந்து சிவபெருமானைத் தோத்திரம் செய்தான். சிவபெருமான் யாது வேண்டுமென்று வினவ, நான்முகன் உலகம் அழிந்

தால், தான் மறுபடியும் அதை எவ்வாறு படைப்பது என்று வினவினன். சிவபெருமான் சிருஷ்டி பீஜத்தை அளித்து அதை ஜாக்கிரதையாகக் காக்க என்று சொல்லி, மேலும், "அமுதத்தையும் மண்ணையும் பிசைந்து ஒரு குடம் செய்து. அக்குடத்தினுள் அமுதத்தை நிரப்பி நடுவில் பீஜத்தை வைத்து நான்கு பக்கங்களிலும் வேதம் ஆகமம் புராணம் இதிகாசம் இவைகளைப்பரப்பி, அந்தக் குடத்தை அலங்கரித்து மேருமலையின் உச்சியில் வைத்தால் வெள்ளம் வரும் காலத்தில் குடம் மிதக்கும்; தெற்கு நோக்கி வெகு தூரம் சென்றபின் அங்கு ஓர் இடத்தில் குடத்தின் மேல் கட்டப்பட்டுள்ள கூர்ச்சம் விழும்; அப்போது நாம் ஒருவேடன் உருவம் கொண்டு வந்து குடத்தை அம்பினல் உடைப்போம். அப்போது அந்த அமுதம் பல திக்கிலும் பாய்ந்து நீண்ட தூரம் நனைக்கும். அந்தக் கும்பத்தின் கீழ் ஒரு தீர்த்தம் உண்டாகும், குடத்தின் கீழ்ப்பாகம் ஓர் இடத்தில் தங்கி அதிலுள்ள வெண் மணல் லிங்க ரூபம் பெறும்; பின்பு நாமே அதைப் பூஜித்து மக்களுக்கு அருள்செய்வோம்" என்றும் கூறினர்.

பிரமன் விடைபெற்றுச் சென்றுன். ஊழிப் பெருக்கால் கடல்கள் ஒன்ருகக் கலந்தன; குடமும் மிதந்தது. தெற்கு நோக்கிச் சென்று காற்றினல் மோதப்பட்டு, பல இடங்களில் மாவிலை, தேங்காய், தருப்பை முதலியன விழுந்து முறையே வன்னிமரம், அதன் நிழலில் லிங்கம் முதலியன ஏற்பட்டன. தேங்காய் தென் கீழ்த்திசையை நோக்கிச் சென்று சிவலிங்கமாயிற்று. அமுத கும்பத்தைப் பார்க்கச் சிவபெருமான் வேட உருவத்தில் எழுந்தருளினர். சிவகணங்களை நோக்கினர். அவர்களுள் ஒருவன் சாத்தன். ஓர் அம்பினல் கும்பத்தைச் சிதைக்க எண்ணியும் பயனில்லாமல் போயிற்று. சாத்தன் வெட்கினன். ஆனல் சிவபெருமான் அவனுக்கு ஏகபாணதாசன் எனப் பெயரிட்டு பாணுதுறை என்று அவ்விடத்திற்குப் பெயரிட்டார். பின்பு தாமே ஓர் அம்பினல் குடத்தின் மூக்கைச் சிதைத்தார். குடம் சிதைந்தது. மூக்கு நீண்ட தூரம் சென்று விழ்ந்தது. சிவபிரான் நின்று அம்பெய்த இடம் குடவாயில் எனப்பெறுகின்றது. பின்பு வேடர் ஒன்று சேர்ந்து அமுதத்தினல் நனைந்த வெண்மணலை வாரி எடுத்தனர். கும்பத்தினுள் சேர்த்து லிங்க வடிவமாகச் செய்து அதைப் பூஜித்தனர். குடமூக்கு வழியாக அமுதம் வழிந்து ஒழுகி நாற்புறமும் பல யோசனை தூரம் நனைந்த இடம் குடமூக்கு என்ற காரணப் பெயர் பெற்றது. குடத்திலிருந்து உத்த்த காரணத்தால் கும்பேசர் எனப் பெயர் பெற்ருர் சிவபெருமான். எம்பெருமான் குடந்தையில் எழுந்தருளியிருப்பதை அறிந்து பார்வத தேவியார் கயிலையிலிருந்து விரைந்து வந்து வழிபட்டாள். மங்கள நாயகி எனப் பெயரிட்டுப் பகவான்

அவளைத் தன் இடப்பக்கத்தில் ஏற்றுக் கொண்டார். சிவபெருமான் தம்மைத் தாமே பூஜித்த இந்த இடத்தில், பிரமன் இறைவனை வேண்டி மறுபடியும் வரம் கிடந்தான். பின்பு அருள் பெற்றுப் படைத்தல் தொழிலை மேற்கொண்டான்.

திருக்குடந்தையில் வைணவர்களுக்கு மிகவும் முக்கியமான கோயில் சாரங்கபாணிகோயில். சாரங்கபாணி தூய ஆராவமுதன் என்று வழங்குவர்.

பிரம்மனும் சூரியனும் தவம் செய்ய, அதைக்கண்டு மெச்சித் திருமால் மூன்று விமானங்கள் செய்து மூன்றினுள்ளும் மூன்று உருவத்துடன் தாம் புகுந்துகொண்டு ஒன்றை வைகுந்தத்தில் இருத்திக்கொண்டு, மற்ற இரண்டையும் பிரம்மனுக்கும் சூரியனுக்கும் கொடுத்தார். அவர்கள் அவற்றைக்கொண்டு சென்று தம் நகரில் பூஜித்து வந்தனர். அந்த முறையில் இக்ஷ்வாகு என்ற அரசனுக்கு அது கிடைத்தது. அவன் பிரம்மனிடத்தில் மற்றொரு விமானம் இருப்பதை அறிந்து அவனை அணுகி அவனிடமிருந்து அதையும் பெற்று இரண்டையும் அருகருகே வைக்குங்கால் அவை இரண்டும் கலந்து ஒன்றாக, இக்ஷ்வாகு சந்தோஷமடைந்து அதைப் பூசித்து வந்தான். இப்படிப் பல அரசர்கள் ஆராதித்து வந்தனர். ஸ்ரீ ராமர் தன் பக்தனான விபீஷணனுக்கு அதைக்கொடுத்தார். விபீஷணன் அதை எடுத்துக்கொண்டு செல்கையில் வழியில் காவிரி ஆற்றின் கரையில் அனுஷ்டானம் முடிக்கக் கீழே வைக்க அவ்விமானம் அங்கே நிலையாக அமைந்து விட்டது. விபீஷணன் மிகவும் வருந்தி அண்ணலைத் துதித்து அழுது வேண்ட அண்ணல் தோன்றி 'இனி அந்த விமானத்தை அசைக்க முடியாது என்றும் அங்கே அநேக ஆண்டுகளாகத் தவம் புரிவோர்களின் வேண்டுகோளுக்கு இணங்கியே தாம் அங்கேயே வாசம் செய்யப்போவதாகவும் அசுரர்களால் கெடுக்கப்பட்ட இலங்கைக்கு வர இயலாது' என்றும் அருளினர். விபீஷணன் யாது செய்வதென்று கேட்க, ஆண்டுக்கு ஒருமுறை தம்மை வந்து தரிசித்தால் நித்ய தரிசன பலன் கிடைக்கும் என்றார். மேலும் இலக்குமி, கோமளவல்லி என்னும் பெயருடன் தம்மை அடையத் தவம் புரிந்து வருவதால் அவளுக்குக் காட்சி கொடுக்கப்போவதாகப் புகன்றார்.

ஒரு காலத்தில் பிருகு முனிவர் திருமால் மார்பில் உதைக்க, பின்பு தாம் செய்த பிழையை உணர்ந்து கடும் தவம் செய்து மறு ஜென்மத்தில் குகப்பெருமாளாகவும் அதற்குப் பிறகு

ஹேமமுனியாகவும் பிறந்து தவம் செய்து பெருமாளின் காட்சி பெற்று பெருமாள் தன் மருமகனுக வேண்டுமென்று வரம் கேட்க, தவம் செய்யும் கோமளவல்லியைத் தம் புத்திரிப்போலப் பாவித்துத் தவம் செய்தால் எம்பெருமான் அருள்செய்வதாகச் சொல்லி மறைந்தார் அதன்படியே இந்த க்ஷேத்திரத்தில் பொற்ருமரைக் கரையில் காட்சி தந்து அருளினுர். முனிவருக்கு வாக்குத் தந்தபடி முனிவரை நோக்கிக் கன்னியைத் தரும்படி கேட்க, அவர் கொடுக்க, கோமளவல்லியை அடைந்து மகிழ்ந்தார்.

சாரங்கபாணிப் பெருமாளின் தெப்பம் மகத்தன்று பகலிலும் இரவிலும் மிகவும் சிறப்பாக நடைபெறும்.

கும்பகோணத்தில் ஆதிகும்பேசுவரர்கோயில் தேவாரம் பெற்றது. நாகேசுவரர்கோயில் என்ற தலமும் தேவாரம் பெற்றது. அதைக் குடந்தைக் கீழ்க்கோட்டம் என்று வழங்குவர். குடந்தைக் காரோணம் என்பது பாடல்பெற்ற மற்ருெரு தலம். இப்போது அதைக் காசிவிசுவநாதர்கோயில் என்று சொல்வார்கள். இந்தக்கோயில்களே அன்றி அபிமுகேசர், கௌதமேசுவரர், பாணபுரீசர் என்ற மூர்த்திகளுக்குரிய சிவாலயங்களும் ஆதிவராகர், சக்ரபாணி வரதர், ராமஸ்வாமி ஆகிய மூர்த்திகளுக்குரிய விஷ்ணு ஆலயங்களும் இங்கே இருக்கின்றன. ராமசுவாமிகோயிலில் அழகான சிற்பங்கள் உள்ளன.

---

## பார்வையாளர் குறிப்பு நகல்

தருமையாதீனம்

### ஸ்ரீ தியாகராஜசுவாமி தேவஸ்தானம், திருக்குவளை

இயற்கை வளம்பொருந்தி தெய்வீக மணங்கமழும் பாடல் பெற்ற ஸ்தலமாகிய இவ்வூரில் தங்கி தியாகராசப்பெருமானைத் தரிசித்து மன நிறைவு அடையத் துணைபுரிந்த ஆதீனகர்த்தருக்கு வணக்கத்தையும் அவருடைய பணியாளர்களுக்கும் எனது சகாக்கள் சார்பாகவும் என் சார்பாகவும் இதயங்கலந்த நன்றியையும் தெரிவித்துக்கொள்கிறேன். விருந்தினர்களை உபசரிக்கும் பழந் தமிழ்ப் பண்பு நிறைந்த இந்த ஆதீன விடுதியாளர்களுக்கு மீண்டும் எமது நன்றி.

(Sd.) T. S பாலசுப்பிரமணியன்,
தணிக்கை அதிகாரி,
மண்டலக் கணக்காயர் அலுவலகம்,
சென்னை - 600018.

27—12—73.

# மகாசிவராத்திரி வரலாறு

**கயப்பாக்கம். திரு, சோமசுந்தரம் செட்டியார்.**

பிரமாதீச–மாசி–8 ( 20—2—74 ) புதன்கிழமை மகாசிவராத்திரி.

தொல்லேய்வல் வினைகழித்துத் தரும்சோம
வாரம்ஆ திரைநோன் பன்றிப்
புல்லியநல் உமாமகேச் சுரம்சிவராத் திரிமுறைமிற்
பொருந்த நோற்கப்
பல்வினையுந் தொலேத்திடுகே தாரமண விரதம்இவை
பரமன் நோன்பு
கொல்லுறுசூற் படைவிரத மெனும் எட்டும்
சிவவிரதம் குணிக்குங்காலே. [உபதேச காண்டம்]

தோற்றுவாய்: சிவமே பரம்பொருள்; சிவசம்பந்த முடையதே சைவம்; அதனை அநுட்டிப்பவர் சைவர். சிவ பரம் பொருளை அடைய வழிகள் நான்கு உண்டு எனச் சாத்தரம் பேசும். அவை, சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பன. சரியையாவது விடியற்காலத்தே நீராடி நீறணிந்து சிவாலயத் திற்குச் சென்று கோயிலேத் திருவலகுகொண்டு சுத்தம்செய்தல், திருமெழுக்கிடுதல், புட்பம் பறித்து மாலேகட்டிக் கொடுத்தல், திருவிளக்கேற்றல், சிவபெருமான் புகழைப் பாடுதல், சிவ விரதங்களை விதிப்படி அநுட்டித்தல், சிவ புராண படனம், சிவ புராண சிரவணம் முதலியனவாம். கிரியையாவது சிவலிங்க பூஜையை முறைப்படி செய்தல். யோகமாவது இயமம், நியமம் முதலியன. விரதங்களை அநுட்டித்தல், சரியை முதல் மூன்றி னும் உண்டு.

விரத வரலாறு: விரதம் என்ருல், உயிர் நன்னெறி நிற்றற் பொருட்டுச் சிலநியமங்களைக் கடைப்பிடித்தல். அவற்றுள் உண்டிசுருக்கல் அல்லது உண்ணுமை முதலாவதாகும். குறிப் பிட்ட சில நாட்களில் பட்டினி இருத்தல் நோயின்றி வாழும்வழி களில் ஒன்ருகும். இதனைமேனுட்டவரும் அவ்வப்போது கைக் கொண்டு வருகின்றனர். எனவேதான், நாமும் நம் உடம்பை நோய் இல்லாமல் காப்பாற்றிக்கொள்ள நம் பெரியோர்கள் விர தங்களை ஏற்படுத்தினுர்கள். மேனுட்டவர் பட்டினியில் கடவுட் சிந்தனைக்கு இடமில்லை ஆனுல்' நம் நாட்டவரோ பட்டினி கிடக்க

நாள்களை ஏற்படுத்தி, அவ்வந்நாட்களில் நாம் ஆண்டவனையும் வழிபட ஏற்பாடு செய்துள்ளார்கள். இதனுல் உயிருக்கும் இலாபம்உண்டு; உடம்பும் நோயின்றித் திகழும். இது விஞ்ஞானத்திற்கும் ஒத்ததாகும்.

தெய்வம் ஒன்றேயாயினும்தெய்வபேதங்கள்பல. எனவேதான், விரதங்களும் பலவாயின. சிவபெருமானுக்குரிய விரதங்கள் எட்டு என்று உபதேச காண்டம் கூறும். இவற்றுள் ஒன்று சிவராத்திரி. இதனை மட்டும் இங்கு விரித்துக் கூறுவாம். " மழவிடை யேறுகைத்திடும் எம்மான், சென்ற சிந்தையில் திருவுளம் உவந்தது தேவரும் முறை நோற்பார். நன்றெனுஞ் சிவராத்திரியில் இது நோற்பவர் நறுங்கொன்றைப் பொன் திகழ்ந்திடு சடைமுடிக் கயிலையம் புனிதனிற்ருேழ நிற்பார். "

சிவராத்திரி வகை : சிவராத்திரியும் ஐவகைப்படும். அவை நித்திய சிவராத்திரி, மாத சிவராத்திரி, யோக சிவராத்திரி பட்சசிவராத்திரி, வருடத்திற்கொருமுறை வரும் மகா சிவராத்திரி (மாக சிவராத்திரி) என்பன.

I. நித்திய சிவராத்திரி : ஒவ்வொரு மாதத்திலேயும் வரும் வளர்பிறை, தேய்பிறைச் சதுர்த்தசி நாட்கள் 24.

II. மாதசிவராத்திரி : தேய்பிறைச் சதுர்த்தசி நாட்கள் 12.

III. யோக சிவராத்திரி : சோமவாரம் சூரிய உதயம் முதல் 10 நாழிகை வரை சதுர்த்தசி இருக்கும் காலம்.

IV. பட்ச சிவராத்திரி : தைமாதம் தேய்பிறைப் பிரதமை தொடங்கி 13 நாட்கள் விரதமிருந்து 14-ம் நாள் விரதம் பூர்த்தி செய்வது.

V. மகாசிவராத்திரி அல்லது மாக சிவராத்திரி : மாக மாதம் அல்லது மாசி மாதத்தில் வரும் தேய்பிறைச் சதுர்த்தசி.

இன்னும் இம்மகாசிவராத்திரி உத்தமோத்தமம் என்றும், உத்தமம் என்றும், மத்திமம் என்றும் அதமம் என்றும் நான்கு வகைகளாகவும் பேசப்பெறும்.

1. சூரியாத்தமனம் வரை திரயோதசியிருந்து, பிறகு சதுர்த்தசி வந்து மறுநாள் பகல்வரை இருக்குமாயின் அது உத்தமோத்தமம்.

2. சூரியாத்தமனத்தின் பின் இரவின் 10 நாழிகைக்குள் சதுர்த்தசி வந்தால், அது உத்தமமாகும்.

3. காலே தொடங்கி மறுநாள் சூர்யோதயம் வரை வரும் சதுர்த்தசியும், சூரியன் அத்தமிப்பதற்கு முன்வரும் சதுர்த்தசியும் இரவின் 10 நாழிகைக்குப்பின் வரும் சதுர்த்தசியும் மத்திமம்.

4. இரவு 20 நாழிகை வரை சதுர்த்தசியிருந்து பிறகு அமாவாசை வந்தால் அது சிவராத்திரி ஆகாது. (திரயோதசியும் சதுர்த்தசியும் கூடிய இரவு சிவலிங்க சொருபம் என்பர் ஆன்ளுேர்) இது சந்நியாசிகட்கும் வைதிகர்கட்கும் உதவும்.

அமாவாசையுடன் திருவோணம் கூடிவரும் சிவராத்திரி உத்தமமாகும்.

அநுட்டிக்கும் முறை :- முன்னுள் இரவு உணவு இன்றிப் பட்டினி கிடந்து, சிவராத்திரி தினத்தன்று காலேயில் நீராடி நித்திய கர்மங்களே முடித்துக்கொண்டு சிவாலயதரிசனம் செய்து, சிவபுராண படன சிரவணஞ் செய்துகொண்டு உணவின்றி இருக்கவேண்டும். சிவபூசையுடையவர்கள் அன்றிரவு நான்கு சாமங்களிலேயும் பூசை செய்யவேண்டும். நித்திரையின்றியும் இருக்கவேண்டும். சிவபூசை ஏற்றுக்கொள்ளாதவர்கள் சிவாலயத்திற்குச் சென்று அங்கு நடைபெறும். நான்குகால பூசைகளேயும் ஊண்உறக்கமின்றித் தரிசித்து அநுட்டிக்க வேண்டியது. மறுநாட் காலே சூரிய உதயத்திற்குமுன் நீராடி நித்திய கருமங்களே முடித்துக்கொண்டு உறவினருடனும், அடியார்களுடனும் பாரணம் செய்தல் வேண்டும். உடம்பிலே உயிர் தங்காதுஎன்று தோன்றினுல் நீர்உட்கொள்ளலாம். அது போதாது என்ருல் பால் சாப்பிடலாம். அதுவும் போதாதெனின், பழம் இனிப்பு வகையான பட்சணங்களே உட்கொள்ளலாம். இவ்வகை அதமம் எனப்படும். ஆனுல் உடம்பில் வலிமை இல்லாதவர்களும், கர்ப்பப்பெண்களும் நோயுடையவர்களும் குழந்தைகளும் இந்நியதியுடன் விரதாநுட்டானம் செய்ய வேண்டியதில்லே. ஏன்? " நாளும் கிழமையும் நலிந்தோர்க்கில்லே " ஆதலால்.

சிவபூசை செய்யும் முறை :

| சாமம் : | அபிடேகம் | பத்திரம் | புட்பம் | நிவேதனம் | தீபம் | தோத்திரம் |
|---|---|---|---|---|---|---|
| 1. | பஞ்சகவ்யம் | வில்வம் | தாமரை | பொங்கல் | அகில் | ருக்வேதம் |
| 2. | பஞ்சாமிர்தம் | துளசி | தாமரை | பாயசம் | சந்தனம் | யஜுர் வேதம் |
| 3. | தேன் | 3 இதழ் | சாதிபுட்பம் | எள்ளன்னம் | பச்சை கற்பூரம் | சாமவேதம் |
| 4. | கருப்பஞ் சாறு | நந்தியா வர்த்தம் | நீலோத் பலம் | சுத்தான் னம் | குங்குமப்பூ | அதர்வண வேதம் |

நான்கு சாமங்களிலும் சிவாலயத்திற்குச் சென்று சிவலிங்க தரிசனம் செய்ய இயலாதவர்கள் இரண்டாஞ் சாமத்திலாவது (லிங்கோத்பவகாலம்) கட்டாயம் சிவதரிசனஞ் செய்யவேண்டும்.

சிவராத்திரி வரலாறு :- இதன் வரலாற்றைச் சிவாகமங்கள் பல வகையாகப் பேசும். ஒன்று மட்டும் இங்கு சிந்திப்போம். பேருழிக்காலம் வந்தது. உலகமும் உயிர்களும் ஒடுங்கின. சூரிய சந்திரரும் ஒடுங்கினர். எங்கும் இருள்மயம், சப்தமுமில்லை. உயிர்களிடம் கருணைகொண்ட உமாதேவியார் ஒளிமயமான சிவலிங்க பூசனையை நான்கு சாமங்களிலும் செய்து ஒளியைப் பரப்பிப் புனர்சிருட்டி செய்தாள் என்று பேசும் சில ஆகமம். இரண்டாம் சாமத்தில் சிவலிங்கத்தினின்றும் சிவபெருமான் வெளிப்பட்டு அம்மையின் சிவபூசைக்கு வியந்து வேண்டும்வரம் யாதெனக் கேட்க உமையம்மையும் நாம் பிழைக்கும்வண்ணம் அந்த இராத்திரி சிவராத்திரியாக இருக்கவேண்டுமென்றும், அந்நாளில் சிவபெருமானை விதிப்படி வழிபடுவோருக்குச் சிவ சாயுச்சியத்தைக் கொடுக்கவேண்டும் என்றும், அவ்விரவு சிவன் பெயராலேயே "சிவராத்திரி" என அழைக்கப்பட வேண்டுமென்றும் வேண்டி வரம்பெற்றாள். மற்றும் சருவ சங்கார காலத்திற்குப்பின் உலகத்தோற்றத்திற்குச் சிவபெருமான் பிரம விட்டுணுக்களின் முன் சோதிப்பிழம்பாய்த் தோன்றியருளியதே சிவராத்திரி என்பதும் சொல்லப்படுகின்றது.

வாழிய சைவம் ! வளர்க நம் பண்பு !!

---

குறிப்பு :— நான்கு சாமங்களிலும் பன்னிரு திருமுறைகளை ஓதுக.

ஆசையறாய் பாசம்விடாய் ஆனசிவ பூசைபண்ணாய்
நேசமுடன் ஐந்தெழுத்தை நீ நினையாய் — சீ சீ
சினமே தவிராய் திருமுறைகள் ஓதாய்
மனமே உனக்கென்ன வாய். —ஸ்ரீ குருஞானசம்பந்தர்.

கடிதம் :

அநபாயன் ஆஸ்திக சங்கம்
திருவாரூர், 27—12—73.

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் திருவடிகட்கு அடியேன் இரத்தின தேசிகர் வணக்கங்கள் பல.

23—12–73 அன்று, திட்டமிட்டபடி அநபாயன் ஆஸ்திக சங்கத்தாரின் "சப்தவிடங்கத் தலங்கள்" வழிபாடு சிறப்புற நடைபெற்றது. முதற்கண் காலை 7-30 மணிக்குத் திருநள்ளாறுசென்றோம். ஸ்ரீமத் கட்டளை சுவாமிகள் முன்னின்று காட்சி கொடுத்து அனைவரையும் பரவசமடையச்செய்தார்கள். இறைவழிபாட்டிற்குமுன் அன்பர்கள் அனைவரும் அடியவரின் திருவடிகட்கு வணக்கம் தெரிவித்துக்கொண்டார்கள். அனைத்துச் சந்நிதிகளும் பொலிவுற்றிருந்தன.

இடையே திருக்கூட்டத்தார் திருக்குவளையை அடைந்தபொழுது ஆண்டிருந்தாரனைவரும் செம்மையில் வழிபாடாற்ற உதவினார்கள். தருமை ஆதீனத் திருக்கோயில்கள் அனைத்தும் செம்மையாக நிர்வகிக்கப்பெறுகின்றன என்ற எண்ணம் அனைவரிடத்தும் உண்டாகிவிட்டது. தங்கள் அருளாணையின் வண்ணம் கண்ணுக்கினிய காட்சியைப்பெற்ற எங்களுக்கு, நாவிற்கினிய உணவும் வழங்கப்பெற்றது. "கார்தட்டிய பஞ்சகாலத்தும் அன்னதானத்திற்கு மார்தட்டுவது தருமை ஆதீனம்" என்ற பெருமையை அனைவரும் பேசி மகிழ்ந்தனர்.

இந்த வழிபாட்டின் பட்டறிவால் அடியேன் எண்ணும் சிலவற்றைத் தங்கள் திருவடிகளுக்குத் தெரிவித்துக்கொள்கிறேன்.

1. கோயில்கள் புனிதமாக இருப்பது மக்களை இறையுணர்வில் திளைக்கச்செய்கிறது.
2. துறவுக் கோலத்திற்கு மக்களிடம் பெருமதிப்பு இருக்கிறது. இவர்களைக்கொண்டே ( துறவிகளை ) தெய்வ நெறியை மக்களிடம் பரப்புவது எளிதாகும்.
3. இதுபோன்ற வழிபாட்டுச் செலவில் இடையிடையே நல்ல அறிஞரைக்கொண்டு 15 அல்லது 30 நிமிட நேரம் சமயக் கருத்துக்களைப் பேசச்செய்தால் மக்களுள்ளங்களில் பதியும்.
4. சமய உண்மைகளை ஒன்றிரண்டு பக்கங்களில் அச்சிட்டு வழிபடுவோரிடம் வழங்குவது பெரும் பயன் அளிக்கும்.

சிவதானங்கள், ஆலயத்தின் தத்துவம், வழிபாட்டு முறை, சைவர்கள் அனுட்டிக்கும் விநாயகர்சதுர்த்தி போன்ற விழாக்களின் தத்துவம், பிரதோஷம், வியதீபாதம் போன்ற புண்ணிய காலங்களின் உண்மை இவற்றைப்பற்றி அச்சிட்டு வழங்குதல் நன்று;

# செய்திகள்

தருமையாதீனத்தில்

## ஸ்ரீ ஆனந்தபரவசர் குருபூஜைவிழா

தருமையாதீனம் 2 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ ஆனந்தபரவச தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் குருபூஜை விழா, நிகழும் பிரமாதீச, மார்கழி 26 ஆம் நாளுக்கு நேரான 10—1—74 வியாழக்கிழமையன்று அவர்களது குரு மூர்த்த ஆலயத்தில் மிகச் சிறப்பாக நிகழ்ந்தேறியது.

தருமையாதீனம் 26 ஆவது ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் காலை, மாலை இருவேளைகளிலும் எழுந்தருளி விசேட, அபிடேக ஆராதனைகள் செய்வித்து அன்பர்களுக்குக் குருவருட் பிரசாதம் வழங்கியருளினார்கள். விழாமலராகப் பதினான்கு சாத்திரங்களுள் ஒன்றாகிய, ஸ்ரீ உமாபதிதேவ நாயனார் அருளிச் செய்த 'திருவருட்பயன்' என்ற நூல் விளக்கவுரையோடு வெளியிடப்பெற்றது. திருவருட்பயனின் பத்து அதிகாரங்களும் பற்றிய விளக்கவுரைச் சொற்பொழிவுகள் காலை மாலை இரு வேளைகளிலும் நடைபெற்றன. ஆதீனத் திருக்கூட்டத்து அடிய வர்களும், ஆதீனப் புலவர்களும், பல்கலைக் கல்லூரி ஆசிரியர் களும், மற்றும்பலரும் இவ்விரிவுரையை நிகழ்த்தினர். அன்பர்கள் திரளாக வந்திருந்து தரிசித்துத் திருவருளும், குருவருளும் பெற்று உய்ந்தனர்.

திருச்சிராப்பள்ளியில்

## ஸ்ரீ மௌனகுரு, ஸ்ரீ தாயுமானசுவாமிகள் குருபூஜைவிழா

தருமையாதீனத்திற்குச் சொந்தமான திருச்சிராப்பள்ளி ஸ்ரீ மலைக்கோட்டையில் திகழும் மௌனமடத்தின் முதல்வர் ஸ்ரீ மௌனகுருசுவாமிகளுக்கும், அவர்களிடம் அருளுபதேசம் பெற்ற ஸ்ரீ தாயுமான சுவாமிகளுக்கும், அவர்கள் திருவருட்பேறு எய்திய விசாக விண்மீன் கூடிய 17—1—74 அன்று குருபூஜை விழா மிகச்சிறப்பாக நடந்தேறியது.

குருபூஜை விழாவை முன்னிட்டு, திருச்சிராப்பள்ளி மலைக் கோயில் ஸ்ரீ மாணிக்கவிநாயகர், ஸ்ரீ உச்சிப்பிள்ளையார், ஸ்ரீமட்டு வார் குழலம்மை உடனுறை ஸ்ரீ தாயுமான சுவாமிக்கும், ஸ்ரீ மௌனகுரு, ஸ்ரீ தாயுமானவருக்கும் விசேட அபிடேக ஆராதனைகளும், நண்பகல் மௌனமடத்தில் மாகேஸ்வரபூஜையும் நடைபெற்றன.

இவ்விழாவின் அங்கமாக மாலை 6-மணியளவில் மலைக் கோட்டை நூற்றுக்கால் மண்டபத்தில் நடைபெற்ற சமய விரிவுரை நிகழ்ச்சிக்குத் திருக்குறள்வேள், திரு. ஜி. வரதராஜப் பிள்ளை அவர்கள் தலைமை வகித்தார்கள். தருமை யாதீனப் பல்கலைக்கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர், திரு. இரா. செல்வக் கணபதி, திருச்சிராப்பள்ளி தேசியக் கல்லூரித் தமிழ்ப்பேராசிரியர், திரு. இரா. இராதாகிருஷ்ணன் எம். ஏ., ஆகியோர் முறையே 'மௌனகுருவும் தாயுமானரும்' 'பராபரக்கண்ணி' என்னும் தலைப்புக்களில் உரை நிகழ்த்தினர். அன்பர்கள் பலரும் குருபூஜை விழாவிலும், சொற்பொழிவு நிகழ்ச்சிகளிலும் பங்கு பற்றினர்.

### தருமையாதீனம்,

### சென்னை சமயப்பிரசார நிலையத்தில் பாவை மாநாடு

1—1—74 முதல் 3—1—74 முடிய நிலையப் பிரசாரக் கொட்டகையில் பாவை மாநாடு சிறப்பாக நடைபெற்றது.

முதல்நாள் (1—1—74) நிகழ்ச்சி சென்னை உயர்நீதிமன்ற நீதிபதி கனம் திரு. என். கிருஷ்ணசாமி ரெட்டியார் தலைமையில் நடைபெற்றது சித்தாந்தப் புலவர்மணி திரு. என். ஆர். முருகவேள், எம். ஏ., எம். ஓ. எல். அவர்களும், டாக்டர். திரு. பால சுப்பிரமணியம், எம். ஏ., எம். எல். எச்., பி. எச்டி. அவர்களும் சொற்பெருக்காற்றினர். குமாரி கௌரி குழுவினரால் "மாணிக்க வாசகர்" பற்றிய இன்னிசைச்சொற்பொழிவு நிகழ்த்தப்பெற்றது.

இரண்டாம் நாள் (2—1—74) நிகழ்ச்சி நகர சிவில் கோர்ட் நீதிபதி திரு. ஆர். மாணிக்கம் அவர்கள் தலைமையில் புலவர் திரு. ஏ. ஜே. இராமசாமிமுதலியார் அவர்கள் சொற்பொழிவாற்றினர். மழலை அமுதச்செல்வி ஆர். மாலினியால் "ஆண்டாள் திருமணம்" பற்றி இன்னிசைச் சொற்பொழிவு நிகழ்த்தப் பெற்றது.

மூன்றும் நாள் (3—1—74) நிகழ்ச்சி சென்னை அட்வகேட் திரு. என். பழநியப்பன் பி. ஏ., பி. எல். அவர்கள் தலைமையில் புலவர் திரு இமயவரம்பன் அவர்களும், திருவாசகமணி திரு. கே. எம். பாலசுப்பிரமணியம் அவர்களும் சொற்பொழிவாற்றினர். சென்னை நகரப் பெருமக்கள் பலர் வந்திருந்து கேட்டுப் பயன்பெற்றனர்.

## கிருத்திகைப் பிரசாதம் வழங்கும் விழா :

தருமையாதீனம், சென்னை சமயப் பிரசார நிலையத்தில்: வைத்தீசுவரன்கோயில் கிருத்திகைப் பிரசாதம் வழங்கும் விழா 6—1—74 அன்று திரு. எஸ். ஓய். கிருஷ்ணசாமி ஐ.சி.எஸ். (ரிடையர்டு) அவர்கள் தலைமையில் நடைபெற்றது. நிலையத் தேவார ஆசிரியர், குழந்தைகளால் பாராயணம் நிகழ்த்தப் பட்டது. விழா முடிவில் வந்திருந்த அன்பர்களுக்குச் சந்தனக் குழம்பு விபூதி பிரசாதம் வழங்கப்பெற்றது; அன்பர்கள் பெற்று அணிந்து பயன் பெற்றனர்.

## மாதாந்தர சமயப்பிரசார வழிபாடு

27—1—74 நிலைய மாதாந்தர சமயப் பிரசார வழிபாடு சென்னை சிந்தாதிரிப்பேட்டை ஸ்ரீ திரிபுரசுந்தரி சமேத ஸ்ரீ ஆதி புரீஸ்வரசுவாமி கோயிலில் நடைபெற்றது. நிலைய அன்பர்கள் சார்பில் ஸ்ரீ சுவாமி அம்பாளுக்கு விசேஷ அபிஷேகம் செய்யப் பட்டது. வழிபாடு முடிந்து சமயப் பிரசாரக் கூட்டம் திரு. V. N. ஆறுமுகம் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. திரு. முத்து வெங்கடாஜலம் அவர்கள் “அன்னை அருள்” என்ற தலைப்பில் சொற்பெருக்காற்றினர். குமாரி கௌரி குழுவினர் நாமாவளி பஜனை, பாராயணம் நிகழ்த்தினர்.

## மதுரை ஸ்ரீ குருஞானசம்பந்தர் திருமடத்தில்:

தருமையாதீனத்திற்குச் சொந்தமான மதுரை ஸ்ரீ குருஞான சம்பந்தர் திருமடத்தில் 8-12-73 அன்று புலவர் திரு. நீ. சீ. சுந்தர ராமன் அவர்களால் கணம்புல்லநாயனர் வரலாறும், 17—12—73 அன்று புலவர் திரு. தா. குருசாமி அவர்களால் இயற்பகைநாயனர் வரலாறும்; 20–12—73 அன்று புலவர் திரு. சு. காசிநாதனால் மானக்கஞ்சாற நாயனர் வரலாறும், 25—12—73 அன்று புலவர் திரு மு. சதாசிவம் அவர்களால் சாக்கிய நாயனர் வரலாறும் விரிவுரை செய்யப்பட்டுப் பிரசாதம்வழங்கப்பட்டது. பேராசிரியர் திரு. இறைக்குருவனரால் 2, 9, 30—12—73 ஆம் நாட்களில் சிவபோகசாரத் தொடர் விரிவுரை வகுப்பு நிகழ்த்தப்பெற்றது. திரளாக அன்பர்கள் வந்திருந்து பயன் பெற்றனர்.

# நவீன சித்தர்

# யூரி. ஜெல்சர்

"Uri gets Britain in a Twist" என்பது ஒரு சனிக்கிழமை வெளிவந்த ஆங்கில நாளிதழின் தலைப்புச்செய்தி. முதல் நாள் இரவுதான் பி. பி. சி. தொலைக் காட்சியில் யூரி ஜெல்சன் என்ற 27 வயது யூத இளைஞர் பெரும் விஞ்ஞானிகளின் விதிகளையும் அறிவியற் கருத்துக் கோள்களையும் தன் மனோசக்தியால் தூள் தூளாக்கியிருந்தார்.

முட் கரண்டிகள் அவர் கைப் பட்டதும் வளைந்தும் நெளிந்தும் போயின. ஓடிக் கொண்டிருந்த கடிகாரங்கள் நின்றன. இந்தச் சாதனைகளை நேரிலும் தொலைக் காட்சியிலும் ஆயிரமாயிரம் மக்கள் பார்த்தனர்.

தொலைக் காட்சி நிலையத்திலிருந்த பல அறிஞர்கள் அதிர்ந்து போனார்கள். இதைத் தவிர மூடிக்கிடந்த ஒரு உறையினுள் இருந்த வரை படத்தை அப்படியே அவர் வரைந்து காட்டினார்.

அமெரிக்காவில் பல சாவிகளை வளைத்துக் காட்டினார். அவரே, அவரைப் புகைப்படம் எடுத்துக்கொண்டார். இதில் என்ன விசேடமெனில் இவர் பிடித்த இந்தப் படத்தை எடுத்த காமிராவின் ஒளி புகும் வழியான "லென்ஸ்" பகுதி அழுந்த மூடப்பட்டிருந்தது.

இவருடைய செயல் முறைகள் அனைத்தையும் துல்லியமாகப் படமெடுத்து ஆய்ந்த கலிஃபோர்னிய ஸ்டான்ஃபோர்ட் ஆய்வுக் கழகத்தைச் சேர்ந்த ஆய்வாளர்கள் இவரது செய்முறைகளை அறிவியலின் எந்தப் பகுதியுடன் சேர்ப்பது என்று புரியாமல் விழிக்கின்றார்களாம்.

"நாஸா"வைச் சேர்ந்த மின் கணக்கி கூட இவர் முன்னிலையில் இயங்க மறுத்துவிட்ட தென்றால் பாருங்களேன்.

பூமிக்கு வெளியே உள்ள கிரகங்களிலிருந்து தனக்கு இந்தச்சக்தி வந்திருக்கக்கூடும் என்கிறார் யூரி ஜெல்ஸர்.

நம்நாட்டுச் சித்தர்களது வியத்தகு செயல்களை அவநம்பிக்கையுடன் நோக்கி வந்த நாம் இதற்கு என்ன பதில் சொல்லப் போகின்றோம்...... ?

ஆதாரம்:- "லண்டன் முரசு"

நன்றி: — இந்துசாதனம், 11—1—74.

# எதிர்காலம்

ஜோதிஷார்ணவம்

திரு. K. முத்துஜோதிடர்

( பிரமாதீசஹு மாசிமீ 1உ முதல் 30உ முடிய )

( 13—2—74 முதல் 13—3—74 முடிய )

ஸ்ரீ சிவபெருமான் அருளால் ஷெ மாசிமதம் கும்பராசியில் ஸ்ரீ லோக ரக்ஷகரான சூரியபகவான் ஷெ வருஷம் தைமாதம் 30ந் தேதி மங்களவாரம் உதையாதி நாழிகை 30. விஞடி 37 க்கு ஸிம்ம லக்னத்தில் பூர்வராத்திரியில் உலக க்ஷேமத்தின் பொருட்டு பிரவேசம் செய்கிருர் அதன் பலன் உலகம் எங்கும் புண்ணிய பூமிகளும் தர்மிஷ்டர்களும் தேவாலய மடாலயங்களும், சாது ஜனங்களும் ரக்ஷிக்கப்படுவார்கள். சகல தோஷங்களும் நீங்கி சுப முண்டாகும்.

முக்கிய குறிப்பு :- ஷெவருஷத்தில் நாளதுவரை கடவுளால் நன்கு நடத்தப்பட்டு சுபிக்ஷமாய் நடத்தி சகல பிரஜைகளும் அன்னபானுதிகளால் போஷிக்கப்பட்டுவந்தார்கள். இந்த மாசி மாதம் கும்பராசி பிரவேசம், தியாச்சியாந்தத்திலும் ஷெமாசிமாதம் 22ந் தேதி முதல் ரிஷபராசியில் தனிமையாக செவ்வாய் கேது சேர்க்கையும் ஏற்படுகிறது. அதனுல் நமக்குக் கடவுளால் அளிக்கப்பட்ட தனதான்யங்கள் எல்லாவற்றையும் காப்பாற்றித் தர மேலோர் பெரியோர்களாலும் குருமார்களாலும் தெய்வ சக்தியைக் கொண்டு காப்பாற்றித்தர சகலமான பிரஜைகளும் பிரார்த்திக்க வேணும். கடவுள் காப்பார். தர்மமே ஜயம். சுபம்.

## 1. மேஷம் – அசுவதி – பரணி – கார்த்திகை ¼

மேஷராசி 9 பாதங்களும் பூர்ணமாக சுபமான பலனைத் தரும். உத்தியோகத்தில் உயர்பதவி கிடைக்கும். கடன் தீரும். வெகுநாட்களாக ஏதிர்பார்த்து நடக்காத காரியங்கள் தாஞகவே நடக்கும். வியாதி நிவர்த்தியாகும். உலகப் பிரசித்தி ஏற்படும். புதன், வியாழன் சுபமாகும்.

2. ரிஷபம் – கார்த்திகை ¾ – ரோஹிணி – மிருகசீர்ஷம் ½

ரிஷபராசி 9 பாதங்களும் மிச்ரமான பலனைத் தரும். வரவு செலவு சமமாக இருந்துகொண்டு இருக்கும். எதிர்பார்த்தகாரியம் கொஞ்சம் தவக்கத்துடன் நடக்கும். வைத்தியச் செலவு ஏற்படும். குடும்பத்தில் கொஞ்சம் கவலை ஏற்படும். வெள்ளி, சனி சுபமாகும்.

3. மிதுனம்–மிருகசீர்ஷம் ½ – திருவாதிரை–புனர்பூசம் ¾

மிதுனராசி 9 பாதங்களும் சுபமிருக்காது. வரவுக்குமிஞ்சிய செலவுகள் ஏற்படும். உறவினர்களாலும் சினேகிதர்களாலும் இடையூறுகள் உண்டாகும். எதிர்பார்த்தபடி எந்தவிதமான காரியமும் நடைபெறுது. குடும்பத்தொல்லைகள் அதிகமாக இருக்கும். ஞாயிறு, திங்கள் சுபமாகும்.

4. கடகம் – புனர்பூசம் ¼ – பூசம் – ஆயில்யம்

கடகராசி 9 பாதங்களும் மிச்ரமானபலனைத்தரும். அதிகமான உழைப்பும் அலைச்சலும் ஏற்படும் வரவ செலவு சமமாக இருக்கும். எதிர்பாராதகாரியங்கள் கொஞ்சம் தவக்கத்தோடு நடக்கும். சில விசேஷமான - அற்புதமான காரியங்கள் நடைபெறும். செவ்வாய், புதன் சுபமாகும்.

5. சிம்மம் – மகம் – பூரம் – உத்திரம் ¼

சிம்மராசி 9 பாதங்களும் சுபமான பலனைத் தரும். உத்தியோகத்தில் இடம்மாறி லாபம் உண்டாகும். தனதான்ய விருத்தி ஏற்படும். இல்லற சுகம் ஓங்கும். உலகத்தில் பிரசித்தி ஏற்படும். வியாழன், வெள்ளி சுபமாகும்.

6. கன்னி – உத்திரம் ¾ – ஹஸ்தம் – சித்திரை ½

கன்னியாராசி 9 பாதங்களும் சுபமான பலனைத்தரும். மேலோர் பெரியோர்களின் அன்பினுல் சகலமும் சாத்தியமாகும். ஆரோக்கியம் உண்டுபண்ணும். ஜீவனம் ஓங்கும். எதிர்பாராத சில நன்மைகள் உண்டாகும். தெய்வீகமான காரியங்கள் ஏற்படும். சனி, ஞாயிறு சுபமாகும்.

7. துலாம் – சித்திரை ½ – சுவாதி – விசாகம் ¾

துலாராசி 9 பாதங்களும் மிச்ரமான பலனைத்தரும். வரவு செலவுச மமாகும். அனுவஸ்யமான அலைச்சல்கள் ஏற்படும்.

வைத்தியச்செலவுகள் உண்டாகும். குடும்பத்தில் தொல்லைகளும் ஜீவனத்தில் சில மாறுதல்களும் ஏற்படும். திங்கள், செவ்வாய் சுபமாகும்.

8. விருச்சிகம் - விசாகம் ¼ - அனுஷம் - கேட்டை.

விருச்சிகராசி 9 பாதங்களும் சுபமிருக்காது. செலவுகள் அதிகமாகும். வீண் அலைச்சல்கள் ஏற்படும் மனதிற்கு எப்பொழுதும் கவலையை உண்டுபண்ணும். உறவினர்களாலும் சிநேகிதர்களாலு பலவிதமான இடையூறுகள் ஏற்படும், புதன், வியாழன் சுபமாகும்.

9. தனுசு - மூலம் - பூராடம் - உத்திராடம் ¼

தனுர்ராசி 9 பாதங்களும் மிச்ரமான பலனைத்தரும். இடம் மாறுதல் ஏற்படும் வரவு செலவு சமமாகும். எதிர்பாராத காரியங்கள் கொஞ்சம் தவக்கத்தோடு நடைபெறும். ஆரோக்கியக் குறைவு ஏற்படும். வெள்ளி, சனி சுபமாகும்.

10. மகரம்-உத்திராடம் ¾ - திருவோணம் - அவிட்டம் ½

மகரராசி 9 பாதங்களும் மிச்ரமான பதனைத்தரும். குடும்பத்தில் கொஞ்சம் கவலை ஏற்படும். மனம் நிம்மதி இருக்காது. வைத்தியச் செலவுகள் ஏற்படும். வீண் அலைச்சல்கள் ஏற்படும். ஞாயிறு திங்கள் சுபமாகும்.

11. கும்பம் - அவிட்டம் ½-சதயம் -பூரட்டாதி-¾

கும்பராசி 9 பாதங்களும் சுபமிருக்காது எதிர்பார்த்த காரியங்கள் நடக்காது. கடன் அதிகமாகும். வைத்தியச்செலவு அதிகமாகும். அதிகமான உழைப்பும் அலைச்சல்களும் ஏற்படும். செவ்வாய், புதன் சுபமாகும்.

12. மீனம் - பூரட்டாதி ¼ - உத்திரட்டாதி - ரேவதி

மீனராசி 9 பாதங்களும் பூர்ணமாக சுப பலனைத்தரும். சஸ்யதான்ய விருத்தி ஏற்படும். மேலோர் பெரியோர் அன்பு கிடைக்கும். எதிர்பாராதபடி சில நன்மைகள் தானுகவே வந்து சேரும். குடும்பத்தில் மங்களகரமான காரியங்கள் நடக்கும். தெய்வபலத்தால் சகலமும் சாத்தியமாகும். சுபம் உண்டாகும். வியாழன் வெள்ளி சுபமாகும்.

# மாசிமாதச் சிறப்பு நாட்கள்

13—2—74 மாசிமாதம் முதல் நாள்.
18—2—74 காரி நாயனுர் குருபூஜை.
19—2—74 மகாப்பிரதோஷம்.
20—2—74 மகாசிவராத்திரி புண்ணியகாலம்.
21—2—74 சர்வ அமாவாசை.
22—2—74 கோச்செங்கட்சோழ நாயனுர் குருபூஜை.
26—2—74 கஞ்சனூர், கும்பகோணம் முதலான இடங்களில் மாசிமக உற்சவ ஆரம்பம்.
28—2—74 வேளூர்க் கார்த்திகை.
3—3—74 மாசிமாதம் 19, 20, 21 இந்த நாட்களில் வேளூரில் சூரிய பூஜை.
6—3—74 மகாப்பிரதோஷம்.
7—3—74 மாசிமகம். திருவையாறு, திருக்குவளை, கும்பகோணம், கஞ்சனூர் முதலான இடங்களில் மாசிமகம் தீர்த்தவாரி. திருக்குவளையில் நெல் மகோற்சவம். ஸ்ரீ நடராஜர் அபிஷேகம்.
8—3—74 பௌர்ணமி மாதபூஜை.
10—3—74 வேளூரில் ஸ்ரீ சந்திரசேகரர் உற்சவ ஆரம்பம் எறிபத்த நாயனுர் குருபூஜை.
11—3—74 சங்கடஹரசதுர்த்தி. தருமையாதீனம் 17 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ மாணிக்கவாசகதேசிக பரமாசாரிய சுவாமிகள் குருபூஜை.

---

## பார்வையாளர் குறிப்பு நகல்

தருமையாதீனம்

### ஸ்ரீ தியாகராஜசுவாமி தேவஸ்தானம், திருக்குவளை.

இன்று கோளிலி மேவிய அம்மை அப்பனைத் தரிசிக்கும் இன்பம் நாங்கள் கிடைக்கப்பெற்றோம். ஆலயத்தின் அழகும் அம்மை, அப்பனின் திருவுருவமும் எங்கள் நெஞ்சிலிருந்து என்றும் அகலா. அதிகாரிகளும் மற்றும் ஆலயப்பணியாளர்களும் இன்முகம் காட்டி நன்முறையில் பழகியது எங்கள் மனத்தைத் தொட்டது. சுருங்கச்சொன்னால் தென்னாட்டு ஆலயங்களுக்குக் கோளிலி ஆலயம் ஒரு எடுத்துக்காட்டு; ஒரு முன்னோடி என்று துணிந்து சொல்லலாம். கோளிலிப்பெருமான் எல்லோரையும் வாழ்விப்பாராக.

(Sd.) S. Janakiraman,
Principal District Munsif,
Thiruthuraipoondi.

23-12—73.

---

தருமையாதீனம், ஞானசம்பந்தம் பதிப்பகத்தின்

## புதிய வெளியீடு !

# திருவருட்பயன் - விளக்கவுரை

[அளவு 1 x 8 கிரௌன் பக்கம் 216; விலை ரூ. 2—50]

சைவ-சித்தாந்த சாத்திர உண்மைகளைத் தெள்ளிதின் விளக்கும் சிறந்த நூல் திருவருட்பயன். சந்தானசாரியர்களுள் நான்காமவராகிய ஸ்ரீ உமாபதி தேவ நாயனார் அருளிச்செய்த எட்டுநூல்களுள் ஒன்றாகவும் பதினான்கு சாத்திரங்களுள் ஒன்றாகவும் திகழ்வது இந்நூல்.

நூறு குறள் வெண்பாக்களால், சைவ சித்தாந்தத்தின் அடிப்படைக் கருத்துக்களாகிய பதி, பசு, பாசம், ஞானகுரு, ஐந்தெழுத்து முதலியவற்றைப் பத்து அதிகாரங்களில் எளிமையாக விளக்கும் தனிச்சிறப்பு இந்நூலுக்கு உள்ளது. சைவ-சித்தாந்த சாத்திர உண்மைகளை முறையாகப் பயிலவிருப்புவோர், முதற்கண் அறியவேண்டிய செய்திகளைத் திரட்டித்தரும் இந்நூல் சைவ-சமயத்தினர் அனைவரும் போற்றிக்கற்க வேண்டிய சிறப்பினது.

தருமையாதீனத் திங்கள் இதழாகிய 'ஞானசம்பந்தத்தில்' சிறந்த விளக்கவுரையோடு எளிய நடையில் வெளிவந்த இந்நூலை அனைவரும் பெற்றுப் பயன்பெற வேண்டும் என்று தருமையாதீனம் 26 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் திருவுளம் பற்றிய வண்ணம், இரண்டாவது குருமகாசந்நிதானப் ஸ்ரீலஸ்ரீ ஆனந்த பரவச தேசிக பரமாசாரிய சுவாமிகள் குருபூஜை விழா மலராக இந்நூல் வெளியிடப்பட்டுள்ளது. தருமையாதீனப் புலவர், சித்தாந்தக் கலைமணி, மகாவித்துவான், திரு. சி. அருணை வடிவேல் முதலியார் அவர்கள் தெளிவுரை, விளக்கவுரை முதலியவற்றோடு, நுண்மையான, சாத்திர தோத்திரக் கருத்துக்கள் அமைய இவ்வுரையை எழுதியுள்ளார்கள்.

அடக்கவிலையில், சிறந்த வெள்ளைக் காகிதத்தில் அச்சிட்டு வெளியிடப்பெற்றுள்ள இந்நூலை சைவ-அன்பர்கள் பெற்றுப் போற்றிக் கற்றுப் பயன் எய்துவார்களாக.

தனிப்பிரதி ரூ. 2—50. அஞ்சல் செலவு தனி. வி. பி. பி. இல்லை.

தொடர்புக்கு : பதிவுத் தபால் 1—25.

மேலாளர்

**ஞானசம்பந்தம் பதிப்பகம்**

தருமபுர ஆதீனம்

மாயூரம் அஞ்சல் 609001 தஞ்சை மாவட்டம்.

Printed & Published by, A. Kalyanasundara Desikar, Superintendent Dharmapuram Adhinam at the Gnanasambandam Press, Dharmapuram, Mayuram. 609001 10—2—74.